# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## மாலை—16






உரையாசிரியர்:

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

(சங்கானடிமை)

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

---

## பொருளடக்கம்

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை — 16

உரையாசிரியர் :

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)





ரக்தாக்ஷி ஆண்டு
விநாயக சதுர்த்தி நன்னாள் வெளியீடு
30-8-1984

பிரசுரம் :

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை - 600 033.

 1984 [விலை ரூ. 3-00

உ

## சைவ சமயாசாரியார்

# நால்வர் துதி


திருஞான சம்பந்தர்


திருநாவுக் கரசர்


சுந்தர மூர்த்திகள்


மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# திருஞானசம்பந்தர்



புண்ணிய முதல், புனைமணி அரைஞாணொடு
போதும் கண்ணிறை கதிர்,
கலைவளர்மதி, கவின்மேவும் பண்ணியல்
கதி, பருவமதொரு மூவருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற்ற
திருஞானசம்பந்தர்

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்



# ஸமர்ப்பணம்

## ஓம் ஸ்ரீகண்டாய நம:

சிவாஷ்டோத்தரசத நாமங்கள் எனப்படும் சிவ பிரானின் அருச்சனைக்குரிய 108 திருநாமங்களில் ஸ்ரீகண்ட: என்பது 16வது திருநாமமாகும். விஷத்தைக் கழுத்தில் கொண்டவர், விஷத்தைக் கழுத்தில் தரித்து அதனுல் அழகுடன் விளங்குபவர் என்று பொருள்படும் ஓம் ஸ்ரீகண்டாய நம: என்னும் இப்பதினுருவது திருநாமத் திருமந்திரத்தால் எம்பெருமானை அருச்சித்துப் பாலரு வாயர் திருப்பிரமபுரம், திருக்கழுமலம் என்ற பெயர் களில் பாடியருளிய திருப்பதிகங்கள் சில அடங்கிய இந்தப் பதினுரும் தமிழ் மாலையினை, அரியயனுக்கு அரிய ராகித் தம்மடியவர்க்கு எளியராகும் பார்வதீகாந்தனின் திருவடிகளில் ஸமர்ப்பிக்கும் எல்லையில்லாப் பேற்றினை முந்தைய பிறவிகளின் புண்ணியத்தால் பெறுகின்றனன்.

இங்ஙனம்

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்

சிவம்






சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

ஒளிறு மணிப்பணி நாட்டும் உலகத்தும் உம்பருள்ளும்
வெளிறு படச்சில நிற்பதுண் டேமிண்டி மீன்உகளும்
அளறு வயற்சண்பை நாதன் அமுதப் பதிகமென்னும்
களிறு விடப்புகு மேல்தொண்டர் பாடுங் கவிதைகளே.

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி - 31
(நம்பியாண்டார்நம்பிகளருளியது, 11-ம் திருமுறை)

மீன்கள் புரளும் சேறு நிறைந்த வயல்வளமுடைய சண்பை யென்னும் ஒரு பெயருடைய சீகாழியில் அவதரித்த திருஞான சம்பந்தரது அமுதம் போன்ற திருப்பதிகம் என்னும் யானையினை விடப்புகுமேல், நாகர் உலகத்திலும், நிலவுலகத் திலும், தேவருலகத்திலும் தொண்டர்கள் பாடுங்கவிதைகள் நாணத்தால் வெளுத்துச் சில நிற்பன உள்ளன என்று திரு ஞானசம்பந்தரது திருப்பதிகச் சிறப்பினை நம்பியாண்டார் நம்பிகள் புகழ்ந்து பாடியுள்ளார். அத்தகைய பெருமையுடைய பதிகங்களை உரைகாணும் முயற்சியில் கும்பிடும் பேறு பெற்ற நாம் சென்ற சில தமிழ்மாலைகளில் சீகாழிப்பதியில் பாடியரு ளிய காலம், வரலாறு தெரியாத பதிகங்களை வெளியிட்டு வருவது சிவநேயர்கள் அறிந்ததே. அந்த முறையில் இந்த பதினாறுவது தமிழ்மாலையில் திருப்பிரமபுரம் திருக்கழுமலம் என்ற பெயர்களில் பாடியருளிய வரலாறு அறியாத பதிகங்கள் உரையுடன் பிரசுரிக்கப்பட்டுள்ளன. வரலாறு

தெரிந்த பதிகங்கள் வரலாற்று முறையிலேயே கொடுக்கப் படும்.

சென்ற சில மாதங்களாகத் தமிழ்மாலைகள் பிரசுரிக்க இயலாது போய் விட்டது. இது வரை வெளியிடப்பட்ட தமிழ்மாலைகள் விற்பனையாகாது தேங்கிக்கிடத்தலால், புதிதாகப் பொருள் தேடினால் மட்டுமே மேற் கொண்டு தமிழ் மாலைகள் வெளியிடக்கூடும் என்ற நிலை ஏற்பட்டதே இத்தகைய தாமதத்துக்குக் காரணம். தொடர்ந்து சில தமிழ் மாலைகள் வெளிவருதற்கு இவ்வருட சிவஞான பூஜாமலர் உதவி செய்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த மாலைக்கும் வழக்கம் போல தமது அரிய கருத்துக் கள், குறிப்புரைகள் ஆகியவற்றை மனமுவந்து வழங்கிய இராணிப்பேட்டைப் பெரும்புலவர் நக்கீரன் வழியடிமை, திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கட்கு நமது நன்றி யினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவநேயர்கள் தொடர்ந்து மாலைகளைப் பெற்றுப் பாலறு வாயர் காட்டியருளிய பதிகப்பெருவழியிற் சென்று பரமனின் அருள் பெற்றுய்யுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்

சென்னை - 33.
15-8-1984

சங்கரனடிமை
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்—பதிப்பாசிரியர்.

சிவம்



சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை—16

## திருஞானசம்பந்தர் அருளியவை

(தொடர்ச்சி)

# திருப்பிரமபுரம்—1

(சீகாழி)

பதிக வரலாறு : பன்னிரு திருப்பெயர்களால் இப்பார் மண்டலத்தே விளங்குகின்ற சீகாழியில் திருப்பிரமபுரம் என்ற பெயரில் ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய வரலாறு தெரியாத மூன்று திருப்பதிகங்கள் இங்குக் கொடுக்கப்படுகின்றன. பிரமதேவன் வழிபட்டுப் பேறு பெற்ற காரணத்தால் திருப்பிரமபுரம் என்ற பெயர் சீகாழிக்கு வழங்கலாயிற்று.

பண்-காந்தாரம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

கறையணி வேலிலர் போலும் கபாலந் தரித்திலர் போலும்
மறையும் நவின்றிலர் போலும் மாசுணம் ஆர்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 1

பதிகப்பொழிப்புரை: 1. திருப்பிரமபுரத்தை விரும்பி எழுந்தருளிய இறைவனார், கறையினையுடைய வேல் (கையினில்) இல்லாதவர் போலும். கபாலத்தினையும் தரித்திலர் போலும். வேதங்களையும் அருளிச் செய்திலர் போலும். பாம்பையும் அணிந்திலர் போலும். உடுக்கையும் கையில் இல்லாதவர் போலும். கரத்தினில் பாசத்தையும் பிடித்திலர் போலும். சடைமுடிக்கு (அணியாக) பிறைச்சந்திரனும் இல்லாதவர் போலும்.

கறை — பகைவர் உடம்பிற் பாய்தலால் குருதி (இரத்தம்) உலர்ந்து அதனால் உண்டான கறுப்பு நிறம், வேலுக்குச் சாதியடை. கபாலம் — பிரம கபாலம். பறை — இங்கு உடுக்கையைக் குறித்தது.

சிவபிரான் தமது உண்மையான (சொரூப நிலையில்) அவர்க்கு உளவாகக் கூறப்பட்டவை ஒன்றுமில்லாத சச்சிதானந்த சொரூபியாதலின் இல்லாதனவாகக் கூறப்பட்டன தடத்தம் என்று கூறப்படும் பொது நிலையில், உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு ஐந்தொழிலும் செய்யும் நிலையில் இவையெல்லாம் இறைவனுக்கு உள்ளனவேயாகலின் 'இலர் போலும்' என ஐயப்பொருட்டாக்கியும் உரைத்தருளினார். உண்மையான ஞானம் பெற்றார்க்குச் சிவபிரான் செய்தனவாக உள்ள அத்தனை செயல்களும் செய்யாதனவாகத் தோன்றும். ஆனால் அவற்றைச் செய்தனவாகக் கொண்டு வழிபாடு செய்வார்க்கே உண்மை ஞானம் உண்டாகும். ஆதலின் அவற்றைப் பொய்யெனலாகாது. இப்பதிகத்தின் கடைசித் திருப்பாட்டில் "அண்ணல் செய்யாதனவெல்லாமறிந்து வகை

வகையாலே......" என்று பிள்ளையார் அருளிச் செய்துள்ளதும் காண்க. எஞ்சிய திருப்பாடல்கள் அனைத்துக்கும் இங்ஙனமே விளக்கம் கண்டு கொள்க. (திருத்தருமபுர ஆதீனக் குறிப்புரையைத் தழுவி இவ்விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது). சீகாழித் திருக்கோயிலில் திருத்தோணியில் இன்றும் தோணிபுரேசர் மான்-மழு முதலியன இன்றிக் காட்சியளிப்பது ஈண்டு கருதற்பாற்று. இது பற்றித் தமது பன்னிரு திருமுறை வரலாறு என்னும் நூலின் முதல் பாகத்தில் வித்துவான் க. வெள்ளைவாரணனுர் அவர்கள் கூறுவதும் ஈண்டைக்கு ஏற்புடைத்தேயாகும். அது வருமாறு:

"........... ஒருவனுகிய இறைவன் உருவம், அருவம், அருவுருவம் என முத்திறப்பட்ட பலவேறு திருமேனிகளையும் மேற்கொண்டு உலகம் உய்யும் வண்ணம் காலந்தோறும் நிகழ்த்திய அருட்செயல்களாகிய புராண வரலாறுகளைப் பரவிப்போற்றும் முறையில் ஆளுடைய பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய பதிகங்கள் பலவாகும். இவையாவும் இறைவனுக்குரிய பொதுவியல்புகளையும் சிறப்பியல்புகளையும் விரவிக்கூறும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம்.

இனி, இறைவனது சிறப்பியல்பாகிய சொரூப இலக்கணம் ஒன்றினையே சிறந்தெடுத்துக் கூறும் முறையில் அமைந்தது, "கறையணி வேலிலர் போலும், கபாலந்தரித்திலர் போலும்...பிரமபுரம் அமர்ந்தாரே" என வரும் பிரமபுரத்திருப்பதிகமாகும். இறைவன் செய்தனவாகப் புராணங்களிற்கூறப்படும் செயல்கள் பலவற்றையும் தொகுத்துக்கூறி, இச்செயல்கள் யாவும் அண்ணலாகிய இறைவனுற்செய்யப்பட்டனவல்ல என மறுத்துரைக்கும் முறையில் இப்பதிகப் பாடல்கள் அமைந்திருத்தல் காணலாம், உலகப்பொருள்கள் ஒன்றிலும் தோய்வற நிற்கும் தன்னுண்மை நிலையில் 'சிவன்' எனத்திகழும் தனிமுதல்வன், முன் கூறப்பட்ட படைத்தல் முதலிய தொழில்கள் எல்லாவற்றையும் தன் தொழிலாகக் கூடி நின்று செய்யும் நிலையிலும் தான் அத்தொழில்பற்றி

விருப்பு வெறுப்புக் கொள்ளாது அவற்றில் தோய்வற விளங்குதல் பற்றி, இறைவன் செய்தனவாக முற்கூறப்பட்ட செயல்கள் யாவும் ஏகதேச நிலையில் ஒன்றிற்கருத்திருத்திச் செய்யும் முறையில் அவ்வாற் செய்யப்பட்டனவல்ல என உலக மக்களுக்கு அறிவுறுத்தும் நிலையில் ஞானசம்பந்தர் இத்திருப்பதிகத்தை அருளிச்செய்துள்ளார். இந்நுட்பம், *'பெண்ணுரு ......வீற்றிருப்பாரவர்தாமே' எனவரும் இதன் திருக்கடைக்காப்பால் இனிது புலனுதல் காணலாம். இத்திருப்பதிகப்பொருளை அடியொற்றி இறைவனது சொரூப இலக்கணத்தினை உணர்த்துவது,

''சிவன்அரு வுருவு மல்லன் சித்தினே டசித்து மல்லன்
பவமுதல் தொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
தவமுதல் யோக போகந் தரிப்பவன் அல்லன் தானே
இவைபெற இயைந்து மொன்றும் இயைந்திடா வியல்பி
னானே''

(சிவஞானசித்தியார், பிரமாணவியல், 1-ம் சூத்திரம். 70-வது திருவிருத்தம்)

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும்''.

கூரம் பதுவிலர் போலுங் கொக்கின் இறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலும் ஆமை அணிந்திலர் போலும்
தாருஞ் சடைக்கிலர் போலும் சண்டிக் கருளிலர் போலும்
பேரும் பலவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 2

2. திருப்பிரமபுரத்தில் விருப்பமுடன் எழுந்தருளிய சிவபிரானுர் கூர்மையான அம்பு, கொக்கின் இறகு இவை இல்லாதவர் போலும். (மார்பிலே) மாலையும் தரித்திலர்

---

* இப்பதிகத்திற்கு இதுவே பொருள் என்பதனை மேலே கொடுக்கப்பட்டுள்ள சித்தியார் விருத்தத்தின் உரையில் மறைஞானதேசிகர் இத்திருப்பாடலைப் பிரமாணமாக எடுத்துக் காட்டினமையால் தெளியலாம்.

போலும். ஆமையும் (மார்பில்) அணிந்திலர் போலும். சடையில் (கொன்றை) மாலையும் இல்லாதவர் போலும். சண்டிக்கு அருள் செய்யவில்லைபோலும். பற்பலபெயர்களும் இல்லாதவர் போலும்.

கொக்கின் இறகு— கொக்கின் வடிவங்கொண்ட பகன் என்னுமசுரனைக் கொன்று அதன் சின்னமாகக் கொக்கின் இறகைத் தரித்துக்கொண்டதாக புராணவரலாறு கூறுவர். இவ்வசுரன் குரண்டன் எனவும் கூறப்படுவன். கொக்கிறகு என்பது ஒருவகை மலர் என்றும் கூறுவர்.

சண்டி — சண்டேசுவரர். பேர்—பெயர் என்பதன் மரூஉ. ஒரு நாமம் ஒருருவம் இல்லாதவராகலின் 'பேரும் பலவிலர் போலும்' என்றருளிச்செய்தனர். அங்ஙனம் ஒரு பெயரு மில்லாத பெருமானையே ஆயிரக்கணக்கான திருநாமங்களால் நாம் பாடுகிறோம் என்று கொள்க.

சித்த வடிவிலர் போலும் தேசந் திரிந்திலர் போலும்
கத்தி வருங்கடுங் காளி கதங்கள் தவிர்த்திலர் போலும்
மெய்த்த நயனம் இடந்தார்க் காழி அளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 3

3. திருப்பிரமபுரத்தில் விருப்பமுடன் எழுந்தருளிய சிவபிரானார் சித்தபுருடர் வடிவம் தரித்தல், தேசங்கள் தோறும் திரிதல், பெருங்கூச்சலுடன் வந்த கடுமையான காளியின் கோபத்தைத் தவிர்த்தல், தனது கண்ணைப் பிடுங்கித் தாமரை யாகப் பூசித்த திருமாலுக்கு சக்கராயுதம் அளித்தல், பித்த வடிவம் பூணுதல் இவை போல்வன ஒன்றும் இல்லாதவர் போலும்.

சித்தவடிவு: திருவிளையாடற்புராணத்தில் இறைவர் சித்த வடிவு பூண்ட செய்தி கூறப்பட்டுள்ளது. அது இறைவரது அருள் விளையாட்டேயன்றி அஃதவர்க்கு உண்மை உருவன்று என்பது ஈண்டு கருதற்குரியது. சித்தவடிவம் பூண்டு தேசந் தோறும் திரிந்ததாகச் சித்தர் கூற்றுகவே பரஞ்சோதி முனிவர்

தாம்பாடிய திருவிளையாடற்புராணத்துள், "...எந்த நன்றுடும் எந்த நகருள்ளும் திரிவம் அப்பா" எனக்கூறியுள்ளது கண்டு கொள்க.

நச்சர வாட்டிலர் போலும் நஞ்சம் மிடற்றிலர் போலும்
கச்சுத் தரித்திலர் போலும் கங்கை தரித்திலர் போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலும் முப்புரம் எய்திலர் போலும்
பிச்சை இரந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 4

4. திருப்பிரமபுரத்தில் விருப்பமுடன் எழுந்தருளியிருக்கும் எமதிறைவர், விடம் நிறைந்த பாம்பினை ஆட்டுதல், விடத்தினைக் கழுத்தில் கொண்டிருத்தல், கச்சினைத் தரித்திருத்தல், கங்கையைத் (தலையில்) தரித்திருத்தல், எப்பொழுதும் சூழ்ந்து கொண்டிருக்கும் வலிய பேய்க்கணங்களை உடையாதாயிருத்தல், முப்புரத்தை எரி செய்தது, பிச்சையிடுக என இரந்தது முதலியன போல்வன ஒன்றும் இல்லாதவர் போலும்.

நச்சு — விஷம்; கச்சு — அரையில் கட்டும் கச்சு. இது இறைவர்க்கு பாம்பு ஆகும். மொய்ச்ச — மொய்த்த அதாவது சூழ்ந்து கொண்டிருக்கிற. வன்பேய் — வன்மையுடைய பேய்க் கூட்டங்கள்.

தோடு செவிக்கிலர் போலும் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய ஆனை உரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலும் ஒள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுத்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 5

5. பெருமையும் செல்வமும் மிகுந்து விளங்கும் திருப்பிரமபுரம் அமர்ந்த எம்பெருமான் செவியில் தோடு தரித்திருத்தல், சூலம் (கையில்) பிடித்தல், ஆடுகின்றதும் பெரியதுமான கையினையுடைய ஆனையினை உரித்துப் போர்த்தல், கையில் ஓடு உடையவராயிருத்தல், மற்றும் ஒளி பொருந்திய தீயைக் கரத்தில் வைத்திருத்தல் முதலிய செயல்கள் ஒன்றும் இல்லாதவர் போலும். ஆடு தடக்கை — ஆடுகின்றதும்

பெரியதுமான துதிக்கை. ஆனையின் துதிக்கை எப்பொழுதும் ஊசல் ஆடும் இயல்புடைது என்பது வெளிப்படை.

விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி அழித்திலர் போலும்
அண்ணல் அயன்தலை வீழ அன்று மறுத்திலர் போலும்
வண்ண எலும்பினொ டக்கு வடங்கள் தரித்திலர் போலும்
பெண்ணினம் மொய்த்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 6

6. மகளிர் கூட்டம் சூழ்ந்து (வழிபாடு செய்ய) எழுகின்றதும், செல்வம் நிறைந்ததுமான திருப்பிரமபுரம் அமர்ந்தருளிய எம் சிவபிரானார், தேவர்களால் தரிசிக்கப்படுதல், தக்கன் வேள்வியை அழித்தல், பிரமதேவனது தலை விழுமாறு அன்று அறுத்தல், அழகிய எலும்புடன் உருத்திராக்க மாலை அணிதல் இவை போல்வன ஒன்றும் இல்லாதவர் போலும்.

பன்றியின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலும்
கன்றிய காலனை வீழக் கால்கொடு பாய்ந்திலர் போலும்
துன்று பிணஞ்சுடு காட்டில் ஆடித் துதைந்திலர் போலும்
பின்றியும் பீடும் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 7

7. மேன்மேலும் பெருமையும் (செல்வமும்) பெருகும் திருப்பிரமபுரமமர்ந்த எம் சிவபெருமான் பன்றியின் கொம்பு தரித்தல், அருச்சுனனுக்குப் பாசுபதக்கணை அருளல், (மார்க்கண்டேயனை) கோபித்து வந்த இயமனை அவன் கீழே விழும்படித் தனது கால் கொண்டு அவன் மேல் பாய்தல் (அதாவது உதைத்தல்), பிணங்களைச் சுடுகின்ற காட்டில் ஆடி நெருங்குதல் செய்தல் முதலான ஒன்றும் இல்லாதவர் போலும்.

பன்றியின் கொம்பு — ''ஏன முளைக்கொம்பு'' எனத் திருஞானசம்பந்தர் தாம் அருளிய முதலாவது திருப்பதிகத்தும் உரைத்துள்ளது காண்க. ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்கும் திருப்பதிகத்துள் இரண்டாவது திருப்பாடல். இதுபற்றிய புராண வரலாற்றுச் சுருக்கம் நம் 2-வது தமிழ் மாலையில் 75-ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்
அரசன் இலங்கையர் கோனை அன்றும் அடர்த்திலர் போலும்
புரைசெய் புனத்திள மானும் புலியின் அதளிலர் போலும்
பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரமமர்ந் தாரே. 8

8. தேன் நிறைந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்த திருப்பிரம புரம் அமர்ந்த எம்பெருமான், மழுவினைக் கையில் தரித்தல், கபாலத்தை மாலையாக அணிதல், இலங்கையரசனாகிய இராவணனை அன்று கால் விரலால் நெருக்குதல், இளமானைக் கையிலேந்துதல், புலியின் தோலை ஆடையாகத் தரித்தல் முதலியன ஒன்றும் இல்லாதவர் போலும்.

பரசு — மழு, படுதலை — கபாலம், முதல் திருப்பாட்டில் கையில் கபாலம் தரித்திலர் என்றமையால், ஈண்டு 'பூண்டிலர்' என்னும் குறிப்பால் மாலையாகப் பூணுதலைக் குறித்தோம்.

புனத்திளமான் — இறைவர் கரத்தில் இருக்கும் மான் தாருக வனத்து முனிவர் வேள்வித்தீயினின்றும் எழுப்பி விடுத்த மானாயினும், மான் என்னும் பொதுமை பற்றி புனத்து இளமான் என்றார். புனம் — காடு, கொல்லை, குறிஞ்சிநிலம். இறைவர் தமது திருக்கரத்தில் தரித்தருளிய மான் பற்றிய வரலாறு கந்தபுராணம் தட்சகாண்டம் ததீசிஉத்தரப் படலத்துள் கண்டு கொள்க.

அடிமுடி மாலயன் தேட அன்றும் அளப்பிலர் போலும்
கடிமலர் ஐங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்
படிமலர்ப் பாலனுக் காகப் பாற்கடல் ஈந்திலர் போலும்
பிடிநடை மாதர் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 9

9. பெண்யானையைப் போன்ற நடையினையுடைய பெண்கள் மிகுதியாகவிருக்கும் திருப்பிரமபுரம் அமர்ந்த எம்மிறைவனார் மாலும் அயனும் முறையே அடியையும் முடியையும் தேடுதற்கு அரியராய் நிற்றல், மணம் மிக்க ஐந்து மலர்களைக் கணைகளாகவுடைய மன்மதனை எரியும்படி தீப்பொறி பறக்கக்

கண்ணால் பார்த்தல், நிலவுலகில் சிறு பாலனுக்காகப் பாற் கடல் ஈதல் முதலிய செயல்கள் ஒன்றும் இல்லாதவர் போலும்.

பாலனுக்குப்பாற் கடல் ஈதல் - புலிக்கால் முனிவரின் குமாரரான உபமன்யு சிறுவராக இருந்தபோது பால் வேண்டியழுதிட அவருக்குப் பாற்கடலையே பரமன் ஈந்தார் என்பது கோயிற்புராணம் முதலிய சிதம்பர மஹிமை கூறும்நூல்களில் கூறப்பட்டுள்ளது. [எமது மற்றொரு வெளியீடாகிய 'தில்லைத் திருநடனம்' என்ற நூலிலும் இதுபற்றிக் கூறப்பட்டுள்ளது]. நமது திருமுறைகளிலும் இச்செய்தி இடம்பெற்றுள்ளது.

வெற்றரைச் சீவரத் தார்க்கு வெளிப்பட நின்றிலர் போலும்
அற்றவர் ஆல்நிழல் நால்வர்க் கறங்கள் உரைத்திலர் போலும்
உற்றல ரொன்றிலர் போலும் ஓடு முடிக்கிலர் போலும்
பெற்றமும் ஊர்ந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 10

10. திருப்பிரமபுரத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பிரானார், ஆடையற்றவர்களாகிய சமணர்களுக்கும், சீவரப் போர்வையால் உடலைப் போர்த்துக் கொள்ளும் பௌத்தர்களுக்கும் வெளிப்பட நிற்றல், ஆலமர நிழலிலே பற்று ஒன்றும் இல்லாதவர்களாகிய சனகாதியர் நால்வர்க்கும் அறங்கள் உரைத்தல், புறச்சமயிகள் கூறும் பழிச்சொற்கள் உடையராயிருத்தல், தலையில் தலையோடு முடித்தல், எருதின் மீது ஊர்தல் முதலிய செயல்கள் ஒன்றும் இலர் போலும்.

வெற்றரைச் சீவரத்தார்க்கு—வெற்றரையர்க்கும் சீவரத்தார்க்கும் என விரித்துப் பொருள் கொள்க. வெற்றரை என்பதைச் சீவரத்தார் என்பதற்கு அடையாக்குதல் பொருந்தாது. என்னே? சீவரத்தார் என்பது சீவரப்போர்வை (பழுப்பு நிறம் ஏறிய ஆடை) போர்த்த பௌத்தரையே குறிக்கும். பௌத்தரை வெற்றரையர் அதாவது ஆடையற்றவர் என்று எங்கும் குறிப்பிடாதது கண்டு கொள்க.

அற்றவர் — இறைவன் பற்றன்றி வேறு எப்பற்றும் அற்றவர். அலர் — பழிச்சொல் (புறச்சமயிகள் கூறுவன).

முடிக்கு ஓடு — தலைக்குத் தலையோட்டினை மாலையாக அணிதல் "தலைமாலை தலைக்கணிந்து தலையாலே பலிதேரும் தலைவன்" (திருஅங்கமாலை - 1) என்பது அப்பரடிகள் அருள்வாக்கு. "தலைக்குத்தலைமாலை அணிந்ததென்னே?" — சுந்தரர் திருவாக்கு. (7 - ம் திருமுறை, திருவஞ்சைக்களப்பதிகம், 1-வது பாடல்)

பெண்ணுரு ஆணுரு அல்லாப் பிரம புரநகர் மேய
அண்ணல்செய் யாதன வெல்லாம் அறிந்து வகை வகையாலே
நண்ணிய ஞானசம் பந்தன் நவின்றன பத்தும்வல் லார்கள்
விண்ணவ ரோடினி தாக வீற்றிருப் பாரவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்.

11. பெண்ணுருவமும் ஆண் உருவமும் அல்லாதவனாகிய, திருப்பிரமபுரம் விரும்பி எழுந்தருளிய, அண்ணலாகிய சிவபிரான் (சொருபநிலையில்) செய்யாதவைகளையெல்லாம் அறிந்து (தடத்த நிலையில் செய்தனவேயாகலின்) வகை வகையாக எடுத்துக் கூறுதலை விரும்பிய திருஞானசம்பந்தன் உரைத்தனவாகிய பத்துத் திருப்பாடல்களையும் பாடித்துதிக்க வல்லவர்களாகிய அவர்கள் தேவர்களோடு இனிதாக விண் உலகத்தில் வீற்றிருப்பார்கள்.

இறைவர் குணங்குறி கடந்தவராகலின் "பெண்ணுரு ஆணுருவல்லாப் பிரமபுர நகர் மேய அண்ணல்" என்றருளிச் செய்தனர். இறைவனை ஆணல்லன், பெண்ணல்லன், அலியுமல்லன் என்று குறிக்குமிடங்கள் திருமுறைகளில் பல உள. வந்துழிக் கண்டு கொள்க.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருப்பிரமபுரம்—2

பண் : பஞ்சமம்] திருச்சிற்றம்பலம் [3-ம் திருமுறை

இறையவன் ஈசனெந்தை இமையோர்தொழு தேத்தநின்ற
கறையணி கண்டன்வெண்தோ டணிகாதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினன் மலையாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிரமாபுரம் பேணுமினே. 1

பதிகப்பொழிப்புரை. 1. இறைவனும், ஈசனும், எந்தையும், தேவர்கள் வணங்கித்துதிக்கின்ற விடக்கறையுள்ள கழுத்தினையுடையவனும், வெண்மையான (சங்கினாலாகிய) தோடு அணிந்த காதினையுடையவனும், அக்காலத்தே வேதத்தின் பொருளை அருளிய வாய்மையனும், உமாதேவியாரோடு பொருந்தியிருப்பவனும், தலையில் பிறைச்சந்திரனை அணிந்த சிவந்த சடையினையுடையவனுமாகிய சிவபிரானது திருப்பிரமாபுரம் என்னும் தலத்தை வழிபடுவீர்களாக. (தலத்தை வழிபடுதல் என்பது தலத்து இறைவனை வழிபடுதலையே குறித்ததாகக் கொள்க)

இறையவன் — தலைவன், அரசன், கடவுள், மூத்தோன், எப்பொருளிலுந்தங்குவோன் முதலிய பொருள்களைத் தரும் இச்சொல் சிவபிரானையே சாரும். மற்றையோர்க்குச் சொல்லும்போது உபசாரமேயாகும்.

ஈசன் — எப்பொருட்கும், எவருக்கும் இறைவன்.

எந்தை — எமது தந்தை, இறைவனே உலகனைத்துக்கும் தந்தையாவர். ''அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்'' என்பது சாத்திரம்.

**கறையணி கண்டன்** — விஷத்தின் கறை அணியாக அமைந்த கழுத்தினையுடையவன்; நீலகண்டன்.

காலத்தன்று — அன்று காலத்து எனமாற்றுக. அக் காலத்து என்னும் பொருளைத்தரும்.

மறைமொழி வாய்மையினுன் — வேதத்துக்குப் பொருள் அருளிச் செய்த வரலாற்றைக் குறித்தது. இதனைத் திருவிளையாடற்புராணத்துள் கண்டுகொள்க.

மலையாள் — மலைமகள், உமாதேவியார்.

பிரமாபுரம், பிரமபுரம் என்று இருவகையாகச் சொல்லும் வழக்கு உள்ளது. பிரம்மதேவன் வழிபட்டதால் இப்பெயர் பெற்றது.

**சடையினன் சாமவேதன் சரிகோவண வன்மழுவாள்**
**படையினன் பாய்புலித்தோ லுடையான்மறை பல்கலைநூல்**
**உடையவன் ஊனமில்லி உடனுயுமை நங்கையென்னும்**
**பெடையொடும் பேணுமிடம் பிரமாபுரம் பேணுமினே.** **2**

2. சடைமுடியை உடையவனும், சாமவேதத்தில் விருப்பமுடையவனும், சரிகின்ற கோவணவாடையுடுத்தவனும், மழுவாகிய வாள்படையினை உடையவனும், பாய்தலையுடைய புலியின் தோலை உடையாகவுடையவனும், வேதம் மற்றும் பலகலைநூல்களையுமுடையவனும். (அவற்றிற்குத் தலைவனும்) எவ்வித குறைபாடும் இல்லாதவனும் ஆகிய சிவபிரான் பெண்களிற்சிறந்தவளாகிய உமாதேவி என்னும் பெண் அன்னத்துடன் விரும்பி எழுந்தருளியிருக்குமிடமாகிய திருப்பிரமாபுரம் என்னும் தலத்தை வழிபடுவீர்களாக.

சாமவேதன் — சாமப்பிரியன், சிவனுக்கு இது ஒரு பெயர். சாமவேதத்தைப் பாடியே இராவணன் இறைவனிடம் நாளும் வாளும் வரம்பெற்ற வரலாறும் காண்க.

**மறை பல்கலை நூல் உடையவன்** — ஈசான:ஸர்வ வித்யானும்" என்பது வேதவாக்கு. மறை முதலிய எல்லாக் கலை

களையும் ஈசனே உண்டு பண்ணியவர். அவரே அவை அனைத்துக்கும் தலைவர்.

ஊனமில்லி — ஊனம் (குறை) ஏதுமற்றவர். அதாவது எல்லா வகையிலும் நிறைவு உடையவர் என்பதாம்.

நங்கை — பெண்களில் சிறந்தவள். பெடை — பெண் பறவை. சிறப்பு பற்றி பெண் அன்னம் என உரைத்தோம். பெண் மயில் எனினும் பொருந்தும்.

மாணியை நாடுகாலன் உயிர்மாய்தரச் செற்றுக்காளி
காணிய ஆடல்கொண்டான் கலந்தூர்வழி சென்றுபிச்சை
ஊணியல் பாகக்கொண்டங் குடனேயுமை நங்கையொடும்
பேணிய கோயில்மன்னும் பிரமாபுரம் பேணுமினே. 3

3. பிரமசாரியாகிய மார்க்கண்டேயரை (உயிரைக் கவர்வதற்காக) நாடி வந்த காலனது உயிர் மாயும்படிக் கொன்றவனும், காளிதேவி காணும்படி நடனம் ஆடுதலை மேற்கொண்டவனும், ஊருராகச் சென்று எடுத்த பிச்சையை உண்ணுதலையே இயல்பாகக் கொண்டவனுமாகிய சிவபிரான் பெண்களில் சிறந்தவளாகிய உமாதேவியாருடன் இருத்தலை விரும்பிய கோயில் நிலைபெற்றுள்ள திருப்பிரமாபுரம் என்னும் தலத்தை வழிபடுவீர்களாக. காணிய — காணும்படி; கலந்தூர் வழி — ஊர்வழி கலந்து என மாற்றிப் பொருள் கொள்க.

பாரிடம் விண்ணுமெங்கும் பயில்நஞ்சு பரந்துமிண்டப்
பேரிடர்த் தேவர்கணம் பெருமானிது காவெனலும்
ஓரிடத் தேகரந்தங்கு உமைநங்கை யொடும்முடனே
பேரிட மாகக்கொண்ட பிரமாபுரம் பேணுமினே. 4

4. நிலவுலகிலும், விண்ணுலகிலும் எங்கும் பயின்ற விஷமானது பரவிப் பெருக அதனால் பெரும் இடர்க்குட்பட்ட தேவர்கள் அனைவரும் ''பெருமானே! இத்துயரினின்றும் எம்மைக் காத்தருள்வீராக'' எனப் பிரார்த்தித்தலும், அதனை (தமது உடலிலே) ஓரிடமாகிய கழுத்தில் மறைத்து வைத்து,

நங்கை உமையுடனே தமது பெருமைக்குரிய இடமாகக் கொண்ட திருப்பிரமாபுரம் என்னும் தலத்தை வழிபடுவீர்களாக.

பாரிடம் — நிலவுலகம்; விண் — தேவருலகம், எங்கும் — மற்ற எல்லாவுலகங்களிலும், மிண்ட — அதிகரிக்க.

பெருமான் இது கா — இம்மாதிரி தேவர்கள் சிவபிரானை வேண்டியது இராமாயணத்திலும், மற்றும் புராணங்களிலும் பிரசித்தம். இதுபற்றி முன்னர் நமது தமிழ்மாலை-15ல் 54-55 பக்கங்களில் கூறியவையும் இங்குக் கொள்க.

ஓரிடத்தே — கண்டமாகிய ஒரு இடத்திலே எனக் கொள்க.

பேரிடம் — பெரிய இடம் அல்லது பெருமையுடைய இடம்.

நச்சர வச்சடைமேல் நளிர்திங்களு மொன்றவைத்தங்(கு)
அச்ச மெழவிடைமேல் அழகார்மழு வேந்திநல்ல
இச்சை பகர்ந்துமிக இடுமின்பலி என்றுநாளும்
பிச்சைகொள் அண்ணல்நண்ணும் பிரமாபுரம் பேணுமினே. 5

5. விஷமுள்ள பாம்புகளைத் தனது சடையில் குளிர்ச்சி உடைய சந்திரனுடன் பொருந்த வைத்து, அச்சம் எழும்படி மழுவையேந்தி, அழகு பொருந்திய எருதின் மேல் ஏறி (இல்லங்கள் தோறும் சென்று) விருப்பம் உண்டாக்கும் சொற்களைப் பேசி பிச்சை மிகவும் இடுங்கள் என்று நாளும் பிச்சை கொள்ளும் தலைவனாகிய சிவபிரான் விரும்பும் பதியாகிய திருப்பிரமாபுரத்தை வழிபடுவீர்களாக.

பிச்சை கொள் அண்ணல் — பிச்சையெடுத்தது ஒரு திருவிளையாடலேயாகலின் அண்ணல் என்றருளிச் செய்தார்.

நண்ணுதல் — இருத்தல், கிட்டுதல், சேர்தல்.

பெற்றவன் முப்புரங்கள் பிழையாவண்ணம் வாளியினால்
செற்றவன் செஞ்சடையில் திகழ்கங்கை தனைதரித்திட்(டு)

ஒற்றை விடையினனும் உமைநங்கை யொடும்முடனே
பெற்றிமை யாலிருந்தான் பிரமாபுரம் பேணுமினே. 6

6. திரிபுர அசுரர்கள் தவத்தினால் பெற்ற வலிய மூன்று புரங்களும் தப்பாவண்ணம் ஓரம்பினால் அழித்தவனும், சிவந்த தனது சடையிலே திகழ்தலையுடைய கங்கையைத் தரித்திட்டு ஒற்றைக் காளை மாட்டின் மீது ஊர்பவனும் நங்கை உமையுடன் தனது சிறப்பு மிக்க தன்மையோடு வீற்றிருந்தவனுமாகிய சிவபிரானது திருப்பிரமாபுரத்தை வழிபடுவீர்களாக.

பெற்றவன் — பெற்ற+வன் எனப் பிரித்து தவத்தினால் பெற்ற வலிய எனப் பொருள் கொள்ளப்பட்டது. பெற்றிமை - தன்மை, குணம்.

வேத மலிந்தவொலி விழவின்னொலி வீணையொலி
கீத மலிந்துடனே கிளரத்திகழ் பௌவமறை
ஓத மலிந்துயர்வான் முகடேறவொண் மால்வரையான்
பேதை யொடும்மிருந்தான் பிரமாபுரம் பேணுமினே. 7

7. வேதத்தின் மிகுதியான ஒலி திருவிழாக்களின் ஒலி வீணையின் ஒலி, கீதஒலி இவைகள் மலிந்து அவை கடல் ஒலியையும் மறைத்துப் பேரொலியாய்ப் பெருகி ஆகாயத்தின் உச்சியையடையம்படி இருப்பதும், அழகு மிக்க மலைமகளாம் உமாதேவியுடன் எழுந்தருளியிருப்பவனாகிய சிவபிரானது பதியுமாகிய, திருப்பிரமாபுரத்தை வழிபடுவீர்களாக.

கடல் ஒலியைவிடப் பேரொலியாய் வேதம் ஓதுதல் முதலியவற்றின் ஒலி வான்உச்சியை யடையுமளவிற்குப் பேரொலியாய்த் திகழும் பிரமாபுரம் என்று தலச்சிறப்பு கூறியது கண்டு கொள்க.

மால்வரையான் பேதை — இமயமலைக்கரசன் மகளாகிய பார்வதி.

இமையவர் அஞ்சியோட எதிர்வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் அடர்த்தும்மலை அன்றெடுப்பக்

குமையது செய்துபாடக் கொற்றவாளோடு நாள்கொடுத்திட்(டு)
உமையொ டிருந்தபிரான் பிரமாபுரம் உன்னுமினே. 8

8. தேவர்கள் பயந்து ஓடத் தன்னை எதிர்ப்பவர் யாருமில்லாது அமைந்த வலிய அரக்கனாகிய இராவணன் மோதுதலைச் செய்து மலையினை அக்காலத்தில் எடுக்க அவன் (அம்மலையின் கீழ் அகப்பட்டு) நசுங்கும்படி குழைத்தல் செய்து, பின் அவனே சாமவேதம் பாடித்துதிக்க அவனுக்கு வெற்றி தரும் வாளொடு நீண்ட ஆயுளும் அருள்செய்து, உமாதேவியாரோடு இனிதே இருந்த சிவபிரானது திருப்பிரமாபுரத்தைத் தியானம் செய்யுங்கள்.

அடர்த்து — மோதி,நெருக்கி, போர்செய்து முதலிய பொருள்கள்.

குமைத்தல் — குழைத்தல். பாட — பாடுதலைச் செய்ய.

உன்னுமின் — நினையுங்கள். தியானியுங்கள் என்ற பொருளைத் தரும்.

ஞாலம் அளித்தவனும் அரியும்மடி யோடுமுடி
காலம் பலசெலவும் கண்டிலாமையி னாற்கதறி
ஓலம் இடவருளி உமைநங்கையொ டும்முடனாய்
ஏல இருந்தபிரான் பிரமாபுரம் ஏத்துமினே. 9

9. உலகத்தினைப் படைத்தவனான பிரமதேவனும் திருமாலும் முறையே திருமுடியையும் திருஅடிகளையும் பல காலம் சென்றும் காணாமையால் (காண இயலாமையினால்) கதறி ஓலமிட அவர்கட்கு அருள் செய்து, உமாதேவியாம் நங்கையோடு உடனாய்ப் பொருத்தமாக வீற்றிருந்த சிவபெருமானது திருப்பிரமாபுரத்தைத் துதியுங்கள்.

கண்டிலாமைக்குக் காரணம் காண இயலாமையேயாகும். பின்னர் அவர்கள் சிவபிரானைத் தொழுது வணங்கிட அவர்கட்குப் பெருமான் காட்சி அளித்தருளினான் என்பதையே அருளி என்று ஓதியருளினர். விரிவு கந்தபுராணம், தட்சகாண்டம், அடிமுடிதேடிய படலத்தில் காண்க.

துவருறும் ஆடையினர் தொக்கபீலியர் நக்கரையர்
அவரவர் தன்மைகள்கண் டணுகேன்மின் னருள்பெறுவீர்
கவருறு சிந்தையொன்றிக் கழிகாலமெல் லாம்படைத்த
இவரவர் என்றிறைஞ்சிப் பிரமாபுரம் ஏத்துமினே. 10

10. காவி அல்லது பழுப்பு நிறம் ஊட்டப்பெற்ற ஆடைய ராகிய பௌத்தர்களும், தொகுத்துக்கட்டிய மயிற்பீலியைக் கையில் தரிப்பவர்களும் ஆடையில்லாத இடுப்பையுடையவர் களுமாகிய சமணர்களும் ஆகிய அவர்களது பொய்த்தன்மை யினை அறிந்து அவர்களை அணுகாதீர்கள். அருள்பெற விரும் புவீர்! ஐயம்பல நிறைந்த மனதை ஒருமைப்படுத்தி சென்ற காலம் முதலிய எல்லாக்காலத்தையும் படைத்த முழு முதற் கடவுள் இவர் சிவபிரான் என்று வணங்கி, அப்பெருமான் உறையும் திருப்பிரமபுரம் ஏத்துங்கள்.

அருள்பெறுவீர் — இது விளியாக அருள் பெற விழை வாரைக் குறித்தது. அல்லது பிரமாபுரம் ஏத்துமின், (அதனால்) அருள் பெறுவீர் என்றும் இயைத்துப் பொருள் கொள்ளலாம்.

கவர் உறு சிந்தை — ஐயங்கள் பல நிறைந்த சிந்தை. இது ஒருமைப்பட்டுத் துதித்தால் மட்டுமே அருள் பெற இயலும் ஆகையால் கவர் உறு சிந்தை ஒன்றி எனக்குறிப்பிட்டு அருளி னார்.

இவர் அவர் — அவரே இவர் என மாற்றிப் பொருள் காணப்பட்டது. காலம் முதலிய எல்லாத்தத்துவங்களையும் படைத்தருளிய முழுமுதற் கடவுள் இவரே, சிவபிரானே, என்று ஒன்றுபட்ட மனத்துடன் துதித்தல் வேண்டும் என்ப தாம்.

உரைதரு நான்மறையோர் புகழ்ந்தேத்த ஒண்மாதினொடும்
வரையென வீற்றிருந்தான் மலிகின்ற பிரமபுரத்(து)
அரசினை ஏத்தவல்ல அணிசம்பந்தன் பத்தும்வல்லார்
விரைதரு விண்ணுலகம் எதிர்கொள்ள விரும்புவரே. 11

திருச்சிற்றம்பலம்

11. சிவபிரானது பெருமையை உரைக்கும் நான்கு வேதங்களையும் பயின்றவர்கள் (அவ்வேதங்களில் கூறியபடி) புகழ்ந்து பாடித்துதித்தலைச் செய்ய அழகு மிக்க மாதாம் உமையவளோடு மலைபோன்று (பெருமையுடன்) வீற்றிருந்தவனாகிய, புகழ் மலிகின்ற திருப்பிரமபுரத்துக் கோயில் கொண்ட அரசனுமாகிய சிவபெருமானை நன்கு துதிக்கவல்லவனாகிய திருஞானசம்பந்தனது அழகிய பத்துப்பாடல்களும் பாடித் துதிக்கவல்லவர்களை மணம் வீசுகின்ற விண்ணுலகத்தவர் எதிர்கொள்ள விரும்புவர்.

உரைதருதல் — உரைத்தல். வேதம் சிவபிரானது முழுமுதற்றன்மையைப் பல்லாற்றானும் விளக்கியுரைக்கும்.

ஒண்மாது — ஒளி அதாவது எழில் உடைய மாது. இங்கே உமையம்மையைக் குறித்தது.

அணி — இதை சம்பந்தனுக்கு அடையாக்குவதைவிடப் பத்தும் என்பதற்கு அடையாக்கி அழகிய பத்துப்பாடல்கள் என்றோ பெருமையுடைய பத்துப்பாடல்கள் என்றோ கொள்வது சிறப்புடைத்து. அணிசம்பந்தன் என்று கொள்ளினும் பொருந்துவதேயாம்.

விரைதரு — மணம் வீசுகின்ற (தேவருலகத்து கற்பகம் முதலிய மலர்கள் நறுமணம் வீசுதலைக் குறிக்கும்.)

விண்ணுலகம் — விண்ணுலகத்தவர், தேவர்கள்.

எதிர்கொள்ள விரும்புவர் — பத்தும் வல்லார்கள் தேவருலகம் செல்ல அங்கு உறைவோர்களாகிய இந்திராதி தேவர்கள் அவர்களை எதிர் கொண்டழைத்துச் செல்ல விரும்புவர் என்பதாம்,

சிவம்






சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருப்பிரமபுரம்—3

புண்-கொல்லி] திருச்சிற்றம்பலம் [3-ம் திருமுறை

கரமுனம்மல ராற்புனல்மலர் தூவியேகலந்(து)
ஏத்துமின்
பரமனூர்பல பேரிஞற்பொலி பத்தர்சித்தர்கள்
தாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லஎம் ஐயன்நாடொறும்
மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகனருள்
பேணியே. 1

பதிகப் பொழிப்புரை: 1. பரமனுகிய சிவபிரானது ஊரும், பல பெயர்களால் பொலிவுடன் விளங்குவதும், பக்தர்களும் சித்தர்களும் பழகியிருப்பதும், வேண்டியவரங்களை நினைக்க அவற்றை அருள்செய்ய வல்ல எமது ஐயன் நாள்தோறும் மேவி இருத்தலாகிய சிறப்பு மிக்கதுமான பிரமனூர் ஆகிய திருப்பிரமாபுரத்தில் எழுந்தருளியுள்ள பிஞ்ஞகனது திருவருளைப் போற்றி கைத்தாமரையால் நீரையும் பூவையும் தூவி மனம் ஒன்றுபட்டு வழிபடுவீர்களாக. (பிரமனூர் பிரமாபுரம் என்பன பிரமதேவன் வழிபட்டதால் சீகாழிக்கு ஏற்பட்ட பெயர்களாகும்.)

கரம் முனம் மலர் — முனம் மலர் என்பது முதன்மையான மலர் என்று பொருள்பட்டு, தாமரையைக் குறிக்கும். எனவே கரமாகிய தாமரை மலரால் எனப்பொருள் கொள்ளப் பட்டது. இவ்வாறின்றி, முனம் என்பதற்கு முன்னம் அதாவது முதலில் எனப்பொருள்கொண்டு முதலில் கரமலரால் நீரையும் பூவை

யும் தூவி வழிபட்டு அதனால் உள்ளம் நிலைப்பட்ட பின் அவனில் கலந்து ஏத்துவதை இப்பாடல் உரைத்தது எனக் கொள்வர் இராணிப்பேட்டை புலவர் திரு. பி.மா. சோம சுந்தரனார் அவர்கள்.

பல பேரினாற்பொலிதல்—சீகாழிக்குப் பன்னிரண்டு திருப் பெயர்கள் உள்ளனவாதலின் இங்ஙனம் கூறினார். கலந்து ஏத்துதல் — மனம், வாக்கு, காயம் ஆகிய முக்கரணங்களும் ஒன்றுபட்டுத் துதித்தல்.

பிஞ்ஞகன் — தலைக்கோலமுடையவன், பின்னிய சடை யையுடையவன்.

விண்ணிலார்மதி சூடினான்விரும் பும்மறையவன்
தன்தலை
உண்ணநன்பலி பேணினான்உல கத்துளானுயி
ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான்பிர மாபுரத்துறை
கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர் கின்றஎம்முடை
ஆதியே. 2

2. விண்ணிலே பொருந்திய சந்திரனைத் தலையில் சூடின வனும், அனைவரும் விரும்பும் நான்மறைகளையோதுபவனாகிய பிரமதேவனின் தலையோட்டில் உண்ணுதற்குப் பிச்சையேற்ற வனும், உலகத்து உயிர்களுக்கு உடம்பும் உயிருமானவனும், மலைமகள் ஒருபாகத்தே பொருந்திய திருமேனியை உடைய வனும், அண்ணலும், திருப்பிரமாபுரத்துறைகின்ற கோயிலுள் அருளைப் பொழிபவனாய் அமர்கின்ற எம்முடைய ஆதிப் பிரானாகிய சிவபெருமானேயாகும். (அவனையே ஏத்துமின் என்று அறிவுறுத்தியதாகக் கொள்க).

அண்ணல் — தலைவன்; அருளாளன் — அருளைப் பொழி பவன்.

உலகத்துளுனுயிரான்—''ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்'' (7ம் திருமுறை 1ம் பதிகம் 7ம் பாடல்), ''ஊனாய் உயிர் புகலாய்'' (7-82-1) இவை சுந்தரர் திருவாக்குகள்.

எல்லையில்புக ழாளனும்இமை யோர்கணத்துடன்
கூடியும்
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த
படிறனும்
தொல்லைவையகத் தேறுதொண்டர்கள் தூமலர்சொரிந்(து)
ஏத்தவே
மல்லையம்பொழில் தேன்பில்கும்பிர மாபுரத்துறை
மைந்தனே. 3

3. எல்லையில்லாத புகழையுடையவனும் தேவர்கள் கூட்டத்துடன் சூழ்ந்திருப்பவனும், பற்கள் நிறைந்த தலையில் பிச்சையேற்று மகிழ்ந்த வஞ்சகனும், பழைமையான இந்த நிலவுலகத்தில் வினைகளைக் கடந்தேறிய தொண்டர்கள் தூய மலர்களைச் சொரிந்து ஏத்த, வளம் மிக்க அழகிய பொழில்களில் தேன் சொட்டுதலையுடைய திருப்பிரமாபுரத்துக் கோயில் கொண்ட வீரனாகிய சிவபெருமானேயாவர்.

எல்லையில் புகழாளன் — இறைவனின் புகழ் ஒரு அளவுக்கு அடங்காதது என்றவாறு. சுந்தரமூர்த்தி சுவாமிகளை இறைவர் தடுத்தாட்கொண்டபோது ''பாடுவாய் நம்மை'' என்றருளிச் செய்ய, சுந்தரர் ''கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங்கடலை நாயேன் யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்'' என மொழிந்தமையும் ஈண்டு கருதற்பாற்று. (பெரிய புராணம்-தடுத்தாட்கொண்ட புராணம் 71, 72)

படிறன் — வஞ்சகன்; ஸர்வைச்வர்ய சம்பன்னரும், எல்லாச் செல்வங்களையும் தம்மை வழிபடுவார்க்கருள்பவருமாகிய பரமன் ஒன்றுமில்லாதார் போலப் பிச்சையேற்று நடித்தலின் வஞ்சகன் என்றார். கீழேயுள்ள திருவிளையாடற்புராணச் செய்யுள் கருத்தும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியது.

குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு இமையாக்
குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் கையிற்படுதலை
கொண்டு
இடங்கள் தோறும் இரப்பா யென்றுஎசு வார்க்குஎன்
பேசுவனே!

(இதன் பொருள்) மதுரையில் எழுந்தருளியிருக்கும் பரமனே! ஒரு உள்ளங்கை நீரும் பச்சிலையும் இட்டு உன்னைப் பூசிப் பவர்க்கு ஐராவதம் ஊர்கின்ற இந்திர பதவியும், பாம்பின் மேல் உறங்கும் திருமாலின் பதவியும், பூமேல் வீற்றிருக்கும் நான்முகன் பதவியும் தருபவனாகிய நீ வீடுகள் தோறும் சென்று கையில் தலையோடு கொண்டு பிச்சையெடுக்கின்றாய் என்று உன்னைப் பழிக்கும் புறச்சமயிகளுக்கு என்ன மறுமொழி கூறுவேன் என்பதாம்.)

அடையலார்புரஞ் சீறியந்தணர் ஏத்தமாமட
மாதொடும்
பெடையெலாங்கடற் கானல்புல்கும்பிர மாபுரத்துறை
கோயிலான்
தொடையலார்நறுங் கொன்றையான்தொழி லேபரவிநின்(று)
ஏத்தினால்
இடையிலார்சிவ லோகமெய்துதற் கீதுகாரணங்
காண்மினே. 4

4. பகைவர்களது மூன்று புரங்களையும் கோபித்து அழித்தும், அந்தணர்கள் துதிக்கப் பெருமையுடைய உமாதேவியாருடன், கடற்கரைச் சோலைகளில் பெண் பறவைகள் எல்லாம் தமது ஆண்பறவைகளுடன் கூடுதலையுடைய, திருப்பிரமாபுரத்தைக் கோயிலாகக் கொண்டவனும், மாலையாக அமைந்த நறிய கொன்றையினை அணிந்தவனுமாகிய சிவபிரானது அருட் செயல்களையே துதித்து வழிபட்டால் இடையீடு ஏதுமில்லாதவர்களாய்ச் சிவலோகம் சென்று அடைவதற்கு இதுவே காரணம் என்பதை அறிவீர்களாக.

அடையலார் — இங்கு முப்புரத்தசுரரைக் குறித்தது.

புல்குதல் — புல்லல் அதாவது தழுவுதல், கூடுதல், பொருந்துதல் முதலிய பொருள்கள். தொடையல் — மாலை.

தொழிலே பரவி நின்று ஏத்துதல் — தொழில் இங்கு சிவ பெருமானின் திருவருட் செயல்களைக் குறித்ததாகக் கொள்க.

இடை — இடையீடு, குறுக்கீடு.

காண்மின் — காண்டல் இங்கு அறிதலைக் குறித்தது.

வாயிடைம்மறை யோதிமங்கையர் வந்திடப்பலி
கொண்டுபோய்ப்
போயிடம்மெரி கானிடைப்புரி நாடகம்இனி(து)
ஆடினன்
பேயொடுங்குடி வாழ்வினன்பிர மாபுரத்துறை
பிஞ்ஞகன்
தாயிடைப்பொருள் தந்தையாகுமென் றோதுவார்க்கருள்
தன்மையே. 5

5. வாயினால் வேதங்களை ஓதிக்கொண்டு, மங்கையர்கள் ஓடிவந்து பிச்சை இடப் பலகாலும் போய், எரிகின்ற கானகத்திடை அதையே அரங்கமாகக் கொண்டு இனிதாக நடனம் ஆடினவனும், பேய்க்கணங்களுடன் ஒருங்கு வாழ்பவனும், திருப்பிரமாபுரத்துறைகின்ற பிஞ்ஞகனும், பெற்ற தாயும் தந்தையும், இடைக்காலத்திலே வந்து சேரும் பொருளும் இப்பெருமானே என்று ஓதுபவர்களுக்கு பெருமானின் அருள் தன்மை அத்தகையதாகவே இருந்தது. (அதாவது தாயும் தந்தையும் பொருளும் அப்பெருமானேயாவான் என்பதாம்).

இடம் எரிகான் — எரிகான் இடம் எனமாற்றிக் கொள்க. எரிகின்ற கானகமே நடமாடும் இடம் என்பதாம்.

... பொருளை ஒருவரும் கொண்டு வந்ததுமில்லை, கொண்டு போகப் போவதுமில்லை. அது இடையில் வந்து சேர்வதாகு லின் இடைப் பொருள் என ஓதியருளினர்.

ஊடினலினி யாவதென்னுயர் நெஞ்சமேயுறு
வல்வினைக்(கு)
ஓடிநீயுழல் கின்றதென்னழ லன்றுதன்கையில்
ஏந்தினன்
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை
வேதியன்
ஏடுநேர்மதி யோடராவணி எந்தையென்றுநின்(று)
ஏத்திடே. 6

6. உயர்நெஞ்சமே! என்சொல்வழி நில்லாது பிணங்கினல் அதனல் உனக்கு ஆகப் போவது தான் என்ன? வலிய வினையை ஈட்டுதற்கென்றே நீ ஓடி உழல்வது தான் என்ன? (அதனை விட்டு என் சொல் கேட்டு) பண்டைக் காலத்தில் தன் திருக்கரத்தில் அழலை ஏந்தியவன், (தன்னை வழிபடும் அடியார்களுக்கு) பேரின்பத்தை வழங்குமதனையே தன் கொள்கையாகவுடையவன், திருப்பிரமாபுரத்து உறையும் வேதியன், மலரை ஒப்ப பிறைச் சந்திரனையும் அதனோடு பாம்பையும் அணியும் எந்தை என்று நம் பெருமானை என்றும் நிலையாக இருந்து ஏத்துவாயாக. (அங்ஙனம் ஏத்தி நின்றால் வலிய வினைகள் உன்னைச் சாரா என்று தனது நெஞ்சுக்கு அறிவுறுத்தும் முகத்தால் உலகர்க்கு ஆசாரிய மூர்த்திகள் உபதேசித்தருளினர் என்று கொள்க).

ஊடுதல் — பிணங்குதல், அதாவது சொல்வழி நில்லாமை

பீடு — பெருமை, இங்குப் பேரின்பத்தைக் குறித்தது.

நேர்ந்த அது கொள்கையான் — இறைவன் தன் அடியார்களுக்கு அருள் புரியும் விரைவு பற்றி 'நேர்ந்த' என இறந்த காலத்தில் கூறியருளினர். ஏடு — மலரின் இதழ்.

இத்திருப்பாடலில் குறிக்கப் பெற்ற "இறைவனர் அழல் ஏந்திய வரலாறு" கந்தபுராணம், தட்சகாண்டம், ததீசி உத்தரப் படலத்தில் உள்ளது.

செய்யன்வெள்ளியன் ஒள்ளியார்சில ரென்றும்ஏத்தி
நினைந்திட
ஐயன்ஆண்டகை அந்தணன்அரு மாமறைப்பொருள்
ஆயினன்
பெய்யுமாமழை யானவன்பிர மாபுரம்இடம்
பேணிய
வெய்யவெண்மழு ஏந்தியைந்நினைந் தேத்துமின்வினை
விடவே. 7

7. செந்நிறமுடையவனும், வெண்மைநிறமுடையவனும் மெய்ஞ்ஞானம் பெற்ற சிலர் எப்பொழுதும் ஏத்தி நினைந்திடும் ஐயனும், வீரனும், அந்தணனும், வேதங்களின் அரிய பெரிய பொருளானவனும், பெய்யும் பெருமழையானவனும், திருப் பிரமாபுரத்தைத் தனது இடமாகக் கொண்டவனும், வலிய வெண் மழுவினை ஏந்தியவனுமான சிவபெருமானை உங்கள் வினைகள் ஒழிய ஏத்துவீர்களாக.

செய்யன், வெளியன் — இறைவன் செம்மேனி எம்மான் ஆயினும், தக்ஷிணாமூர்த்தியாகக் கல்லாலமரத்து நீழலிலமர்ந்த போது வெண்மை நிறத்தை மேற்கொண்டனன் என்பது புராணங்கள் நுவலும் செய்தியாம். ''சுத்த ஸ்படிக சங்காசம்'' என்று வடமொழிக் காந்தம் உரைக்கும் அதனையே பரஞ் சோதி முனிவர் தம் திருவிளையாடற்புராணத்தில் ''சீதளப் பளிக்கு மேனியும்'' என்றருளிச் செய்தார். குளிர்ந்த கண்ணாடி அல்லது படிகம் போன்ற திருமேனி என்பது இதன் பொருள் ஆகும்.

ஐயன் — தலைவன். ஆண்டகை — அரசன், வீரன்.

அந்தணன் — அந்தண்மை பூண்டு இன்னருள் சுரக்கும் இறைவன் அந்தணன் எனப்பட்டான். தண்மை — குளிர்ச்சி, இங்கு அருளைக்குறித்தது. இறைவனை அந்தணன் என ஏத்திப் பாடப்பட்ட இடங்கள் திருமுறைகளில் பல உள்ளன. ''அறவாழி அந்தணன்'' என்று திருக்குறளிலும், ''யாழ்கெழு

மணிமிடற்று அந்தணன்'' என அகநானூற்றின் கண்ணும் சிவபெருமான் வழுத்தப்பட்டுள்ளது இங்குக் கருதற்பாற்று.

மறை — வேதங்கள், சாதியொருமை. அவ்வேதங்கள் கூறும் அரியபெரிய பொருள் (பரம்பொருள்) சிவபிரானே யாவர். மற்றையோரைப்பற்றி அவ்வேதங்கள் கூறுவது உப சாரமேயாம். இதுபற்றி மேலும் விரிவு வேண்டுவோர் கந்த புராணம், தட்ச காண்டம், தட்சனுக்கு நான்முகன் செய்த உபதேசமடங்கிய உபதேசப்படலத்தில் கண்டு தெளிக.

பெய்யுமாமழை — உலகிற்கு மழை இன்றியமையாதது போல இறைவனும் இன்றியமையாதவன். உலகை மழை காப்பது போல இறைவன் உலகைக்காப்பாற்றுகிருன். கைம்மாறு வேண்டாது மாரி பொழிவது போல இறைவனும் கைம்மாறு வேண்டாது தன்னருளைப் பொழிகிருன். இறைவனது அருளே மழை. திருக்குறளில் பாயிரவியலில் கடவுள் வாழ்த்துக்குப் பிறகு வான்சிறப்பு வைத்தோதப்பட்டதும், வான்சிறப்பை விளக்கும் குறள்களின் பொருள் ஆழமும் இங்குச் சிந்தித்துத் தெளிக.

வினை விட — வினைகள் நீங்க.

கன்றெருக்கையில் ஏந்திநல்விள வின்கனிபட
நூறியும்
சென்றெருக்கிய மாமறைப்பொருள் தேர்ந்தசெம்மல
ரோனுமாய்
அன்றரக்கனைச் செற்றவன்அடி யும்முடியவை
காண்கிலார்
பின்தருக்கிய தண்பொழிற்பிர மாபுரத்தரன்
பெற்றியே. 8

8. ஒருகையினால் பசுவின் கன்றினைப்பற்றி விளாமரத்தின் கனியினை அழித்தவனாகிய திருமாலும், ஒருங்கே தொகுக்கப்பட்ட வேதங்களின் பொருளைத் தேர்ந்தவனாகிய நான்முகனும் ஆகிய இருவரும், அன்று இராவணனை

(திருவிரல் ஒன்றினால்) நெருக்கியருளியவராகிய சிவபிரானது திருவடியையும் திருமுடியையும் காணச் சென்றும், எழுச்சி மிக்க குளிர்ச்சி பொருந்திய சோலைகள் நிறைந்த திருப்பிரமா புரத்துக் கோயில் கொண்ட சிவபிரானது உண்மையான பெருமையைக் காண இயலாதவர்களாயினார்கள்.

கண்ணன் திருமாலின் பூரண அவதாரமாகக் கருதப் படுதலின் அவனது செய்கையைத் திருமாலின் மீது ஏற்றிக் கூறினார். கண்ணன் இளமைப்பருவத்தில் ஆயர்பாடியில் நந்தகோபன் மனையில் வளர்ந்து வந்தபோது அவனைக் கொல்லக் கம்சனால் ஏவப்பட்ட இரு அசுரர்கள் கன்றின் வடிவமாகவும் விளாமரத்தின் வடிவமாகவும் நின்று கண்ணனைக் கொல்லச் சமயம் பார்த்திருந்தனர். இதனை அறிந்த கண்ணன் ஒரு கையால் கன்றினைப்பற்றி விளாமரத் தின் மீது எறிந்து இருவரும் ஒரேசமயத்தில் மரிக்குமாறு செய்தான். இந்தக் கதையையும் நம் பேரருளாளரான திரு ஞானப்பிள்ளையார் ஒப்பி, அத்தகைய சூரனேயாயினும் சிவ பிரானது திருவடியைக் காண இயலாதவனாயினன் என்று நம்பெருமானின் ஏற்றத்தை அழகுற விளக்கியருளியது கண்டு கொள்க.

தருக்கிய—இச்சொல் அகங்காரம், கதிர், களிப்பு, எழுச்சி முதலிய பொருள்களைத் தருமாதலால் பொழிலுக்கு அடையாக வந்தமையின் எழுச்சி என உரை கொள்ளப்பட்டது.

உண்டுடுக்கைவிட் டார்களும்உயர் கஞ்சிமண்டைகொள்
தேரரும்
பண்டடக்குசொற் பேசுமப்பரி வொன்றிலார்கள்சொற்
கொள்ளன்மின்
தண்டொடக்குவன் சூலமுந்தழல் மாமழுப்படை
தன்கையில்
கொண்டொடுக்கிய மைந்தன்எம்பிர மாபுரத்துறை
கூத்தனே. 9

9. உண்ணுதலைக் கைவிடாது உண்டு, ஆடையைக் கைவிட்டவர்கள் சமணர்கள். மண்டை என்ற பாத்திரத்தில் ஏற்று கஞ்சி உணவை உண்பவர்கள் பௌத்தர்கள். (மக்கள் இடத்து) பரிவு ஒன்றுமில்லாதவர்களாகிய அவர்கள் உயர்ந்தவையும் தொன்று தொட்டு வந்தவையுமானவேத ஆகம நூற்களை இழிவுபடுத்திப் பேசுபவர்கள். அவர்களது சொற்களை ஏற்றுக் கொள்ளாதீர்கள். வீணையோடு, அக்குமாலை, சூலம், தழல், பெரிய மழுப்படை ஆகியவற்றைத்தன் கைகளிற் கொண்டு இவ்வுலகமனைத்தையும் ஒடுக்கியருளும் வீரன் எமது திருப்பிரமாபுரத்துக் கோயில் கொண்டு அருளிய கூத்தனாகிய சிவபிரானேயாவர் (அவரையே ஏத்துவீர்களாக).

பண்டு — பழமை, இங்குப் பழையாக வந்து கொண்டு இருக்கும் வேத ஆகம நூற்கருத்துக்களைக் குறித்ததென்க. முதலடியில் உள்ள உயர் என்ற சொல்லை பண்டு என்பதற்கு அடையாக்கி உயர்ந்த வேத நூற் கருத்துக்கள் என உரைக்க.

அடக்கு சொல் — அவற்றின் பெருமையைக் குறைக்கும் சொற்கள், அவற்றை இழித்துக் கூறும் சொற்கள்.

பரிவு ஒன்றில்லார் — தமது பிழைபட்ட கொள்கைகளைப் பரப்புதலேயன்றி மக்கள் நற்கதியடைய வேண்டும் என்ற நல்லெண்ணம் இல்லாதவர்கள். பரிவு — அன்பு.

ஒருக்கிய — உலகத்துயிர்களை ஒடுக்கிய. ஒடுக்குதல் இறைவனது சங்காரத் தொழில். அதற்கேற்ப உலகத்து உயிர்களை என்ற செயப்படுபொருள் வருவித்து உரைக்கப் பட்டது. மைந்தன் — வீரன்.

தண்டு — வீணை. உலகத்தை ஒடுக்கும் போது இறைவர் வீணையோடு இருப்பர் என்பதை அறிவிக்கும் அப்பர் திருப் பாடல் காண்க.

திருச்சிற்றம்பலம்

''பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய்
இருங்கடன் மூடி இறக்குமிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின்று எம்மிறை நல் வீணை வாசிக்குமே.

திருச்சிற்றம்பலம்

—அப்பர் தேவாரம், 4 - ம் திருமுறை 112 - ம் பதிகம்
7 - ம் திருப்பாடல்

''ஒடுங்கிய உலகம் மீளத்தோன்றும் முறைமையில் சங்கற்பம் செய்து எம் இறைவன் நல் வீணை வாசிக்கும்'' என்பது மேலேயுள்ள பாடலின் கடைசி அடியின் பொருள். இதனால் ஒடுக்கிய இறைவனே மீளத் தோற்றுவித்தலைச் செய்கின்றான் என்று உணர்த்தியது கண்டு கொள்க. தண்டு என்ற சொல்லினால் இப்பொருளைப் பெறவைத்தார் நமது பிள்ளையார். ''தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம், அந்தம் ஆதி என்மனார் புலவர்'' என்ற சிவஞானபோதம் முதற் சூத்திரத்து 2, 3 அதிகரணங்களாலும் அவற்றிற்கு மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த மாபாடியத் தாலும் ''ஒருவனால் தோற்றப்பட்டு உள்ளதாய உலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான கடவுளினின்றும் உளதாம். ஒடுங்கியவாறே ஒழிந்து விடாது மீளவும் உளதாகும். இங்ஙனமாகலின் சங்காரத் தொழிலைச் செய்யுங்கடவுளே முதற்கடவுள் என்று அறிவுடையோர் கூறுவர்'' என்பதையும் அறிந்து கொள்க.

கூத்தன் — படைப்பாதி ஐந்தொழில்களும் இறைவர்க்குத் திருவிளையாடலேயாகலின் கூத்தன் என்றார்.

பித்தனைப்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்கழல்
பேணியே
மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருள்
மேவிட

**வைத்தசிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள்**
**பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை போற்றிசெய்யுமெய்ம் மாந்தரே. 10**

திருச்சிற்றம்பலம்

10. மெய்ந்நெறி விழையும் மாந்தரே! பித்தனும் திருப் பிரமாபுரத்து உறைகின்ற பிஞ்ஞகனும் ஆகிய சிவபிரானின் திருவடிகளைப் போற்றிச் சிந்தையுள் வைத்த திருஞான சம்பந்தன் அழிவில்லாத தவநெறியில் நிற்போர்க்கு அத் தன்மையை எடுத்துக்கூறி, நற்பொருளாகிய பேரின்பத்தை அடையுமாறு வாயினல் உரைக்கத் தோன்றும் தமிழ் மாலை களைப் பொய்த்தவத்தில் உய்க்கின்ற பொறிகளின் செய்கை நீங்கும்படிச் செய்ய இனிய இசையுடன் கூடிப் போற்றி செய் வீர்களாக. (தவம் என்ற பெயரால் அவநெறியில் உய்க்கும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளின் செயல்களை நீங்கச் செய்தல் இப்பதிகப் படனப்பலன் என்று கூறியருளியதாகக் கொள்க).

பித்தன் — பேரருளுடைமை காரணமாகச் சிவபிரானுக்கு வழங்கும் திருப்பெயர், 'பெற்றமனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என வழங்குதலையும் கருதுக.

பிஞ்ஞகன்—தலைக்கோலம் உடையவன் என்பதே பெரும் பாலும் ஆசிரியன்மார் கூறிவரும் உரை. ''பிஞ்ஞகந்தான் துலங்கிய தலைக்கோலப்பேர்'' என்பது சூடாமணி நிகண்டு. அன்னை என்பது அஞ்ஞை என்று மாறினது போல பின்னல் என்பது பிஞ்ஞல் எனவாகி அதையுடையவன் அதாவது பின்னிய சடையை உடையவன் என்ற பொருளும் கூறப்படு கிறது. பின்னியசடை என்று திருக்கழுமலப் பதிகத்துள்ளும் பிள்ளையார் அருளிச் செய்துள்ளார்.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கழுமலம்—1

(சீகாழி)

பதிக வரலாறு: சீகாழியின் பன்னிரு திருப்பெயர்களில் பன்னிரண்டாவதாக வைத்து எண்ணப்படுகின்ற திருக் கழுமலம் என்ற பெயரில் திருஞானசம்பந்தர் பாடியவை ஆறு பதிகங்கள் உள்ளன. இவற்றில் திருத்தாளச்சதி என்று தனித் தலைப்புடன் உள்ள பதிகம் அம்மாதிரி உள்ள பதிகங்களுடன் பிரசுரிக்கப்படும். ''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'' எனத் தொடங்கும் திருப்பதிகம் வரலாறு தெரிந்தவொன்றாகையால் வரலாற்று முறையில் உரிய காலத்தில் கொடுக்கப்படும். ஏனைய வரலாறு அறிய இயலாத நான்கு பதிகங்கள் ஒவ் வொன்றாக இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

உரோமசர் என்னும் முனிவர் வழிபட்டு உயிர்கள் மலங் கழுவும் வரம் பெற்றமையால் திருக்கழுமலம் என்ற பெயர் பெற்றது என்பர். தமது மலம் நீங்கவே பூசித்தார் என்றும் சிலர் கூறுவர்.

பண் – நட்டபாடை] திருவிராகம் [1–ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பிறையணி படர்சடை முடியிடை பெருகிய
புனலுடை யவனிறை
இறையணி வளையிணை முலையவள் இணைவன
தெழிலுடை இடவகை
கறையணி பொழில்நிறை வயலணி கழுமலம்
அமர்கன லுருவினன்
நறையணி மலர்நறு விரைபுல்கு நலமலி 1
கழல்தொழன் மருவுமே,

பதிகப்பொழிப்புரை : 1. பிறைச்சந்திரனை அணிந்த படர்ந்த சடைமுடியின் இடையில் பெருகிய கங்கையாகிய நீரையுடையவனும், இறைவனும், முன்னங்கைகளில் வளையல்களணிந்த உமாதேவியாரொடு இணைந்து ஒரே உருவில் நிற்பவனுமான சிவபிரானது எழில்மிக்க இடமும், நிழல்மிக்க பொழில்கள் நிறைந்ததும் வயல்கள் சூழ்ந்ததுமாகிய திருக்கழுமலம் என்னும் திருத்தலத்தில் விரும்பி எழுந்தருளிய கனல் உருவினனாகிய அச்சிவபெருமானது தேனோடு கூடிய அழகிய மலர்களின் நறியமணம் பொருந்தியதும் நன்மை மிகுந்தது மான திருவடிகளைத் தொழுதலையே பொருந்துங்கள்.

பெருகிய புனல் — பெருவெள்ளமாக விண்ணினின்றும் இழிந்த கங்கை. இறை — முன்கை. இணைமுலை — இரண்டு முலைகள். இவை பரஞானம், அபரஞானம் எனப்படும்.

இணைவன் — இணைபவன், ஒரே உருவில் தோன்றுபவன்.

கறை — இருள். நிழலால் ஏற்படுவது. கனல் உருவினன்- தீ வண்ணத்தன், தீயின் வடிவானவன் எனலுமாம்; தீ இறைவனது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகும்.

விரை — மணம். தேன் நிறைந்ததும் மணம் மிக்கவையு மான மலர்களால் அருச்சிக்கப்படும் திருவடிகளாதலால் 'நறையணி மலர் நறுவிரை புல்கு கழல்' என்றருளிச் செய்தார்.

நலம்—நன்மை. இங்கு திருவடியளிக்கும் பேரின்பத்தின் மீது நின்றது. இப்பதிகத்தில் வருமிடங்களிலெல்லாம் இவ்வாறே கொள்க.

பிணிபடு கடல்பிற விகளறல் எளிதுள
ததுபெரு கியதிரை
அணிபடு கழுமலம் இனிதம ரனலுரு
வினன்அவிர் சடைமிசை

நணிபடு கதிர்வள ரிளமதி புனைவனை
உமைதலை வணைநிறம்
மணிபடு கறைமிட றனைநல மலிகழ
லிணைதொழுதன் மருவுமே. 2

2. பிணிகளோடு தொடக்குண்ட கடல் போன்ற பிறவிகள் நீங்குதற்கு எளிய வழி உள்ளது. அது யாதெனின், மிகப் பெருகுகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த திருக்கழுமலம் என்னும் திருத்தலத்தில் இனிதாக அமர்ந்துள்ள அனல் உருவினனும், விரித்த சடையின் மீது குளிர்ச்சி பொருந்திய வளர்தற்குரிய இளம்பிறைச் சந்திரனை அணிந்தவனும், உமா தேவியாரின் கணவனும், ஒளி பொருந்திய நீலமணி போலும் விஷம் பொருந்திய கழுத்தினையுடையவனுமாகிய சிவ பிரானது நன்மை மிக்க திருவடிகளைத் தொழுதலையே பொருந்துங்கள். (பிணிபடு பிறவிக்கடல் நீங்குதற்கு எளிய உபாயம் இறைவனது கழல்களைத் தொழுதலைப் பொருந்துவதேயாகும் என்பது இத்திருப்பாடலின் கருத்தாகும்).

பிணிபடு கடல் பிறவிகள்-உயிரையும் உடலையும் பற்றிய பிணிகள். இவற்றோடு தொடக்குண்டு காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் கடல் போன்ற பிறவிகள் என்றருளிச்செய்தார். ''தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்து'' என மாணிக்கவாசகர் அருளிச்செய்ததுங் காண்க. (திருவாசகம், திருச்சதகம் - 27) பௌவம் - கடல்.

அறல் — நீங்குதல். எளிது உளது—எளிய வழி உள்ளது. அது — அந்த வழியைச் சுட்டிநின்றது.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்'' (திருக்குறள் — 10)

என்ற திருக்குறளும் அதற்குப் பரிமேலழகர் உரைத்த உரையும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியனவாம்.

வரியுறு புலியத ளுடையினன் வளர்பிறை
ஒளிகிளர் கதிர்பொதி
விரியுறு சடைவிரை புரைபொழில் விழவொலி
மலிகழு மலமமர்
எரியுறு நிறஇறை வனதடி இரவொடு
பகல்பர வுவர்தம
தெரியுறு வினைசெறி கதிர்முனை இருள்கெட
நனிநினை வெய்துமதே. 3

3. கோடுகள் பொருந்திய புலித்தோலை உடையாகக் கொண்டவனும், ஒளி திகழ்கின்ற கிரணங்களையுடைய வளர் பிறைச்சந்திரன் பொதிந்த விரிந்த சடையினையுடையவனும், மணம் பொருந்திய உயர்ச்சியுடைய பொழில்களும் திரு விழாக்களின் ஒலியும் மலிந்த திருக்கழுமலம் என்னுந்தலத்தில் விரும்பியெழுந்தருளிய தீவண்ணத்தவனுமாகிய சிவபிரானது திருவடிகளை இரவும் பகலும் தொழுபவர்கள், தம்மை வருத்து கின்ற வல்வினைகள் சூரியன் முன் இருள்போல் கெட, இறை வன் நினைவு இடைவிடாது எய்துவார்கள்.

இறைவனது அடி இரவொடு பகல் பரவுவர்தம வினை கெட நனி நினைவு எய்தும் எனக் கூட்டிப் பொருள் கொள்ளப் பட்டது.

வினைகெட மனநினை வதுமுடி கெனில்நனி
தொழுதெழு குலமதி
புனைகொடி யிடைபொருள் தருபடு களிறின
துரிபுதை உடலினன்
மனைகுட வயிறுடை யனசில வருகுறள்
படையுடை யவன்மலி
கனைகட லடைகழு மலமமர் கதிர்மதி
யினனதிர் கழல்களே. 4

4. நெஞ்சமே! வினைகள் கெடவேண்டுமென்ற மன நினைப்பு முடியவேண்டுமானால், உயர்ந்த பிறைச்சந்திரனை

அணிந்து, கொடிபோலும் இடையையுடைய உமாதேவியார் ஒரு பாகமாகத் தோன்றுவதும், தான்கொன்ற யானையின் உரித்த தோலினல் மூடப்பட்டதுமான திருமேனியையுடைய வனும், வீடுகளில் உள்ள குடம் போன்ற வயிறு உடையன வாகிய சில பூதகணங்களைப் படையாகவுடையவனும், ஒலிக் கின்ற கடல் சூழ்ந்த திருக்கழுமலம் அமர்ந்த சூரியன், சந்திரன் இவற்றைத் தனது உடலாக உடையவனுமான சிவபெருமானது அதிர்கின்ற கழல்களையணிந்த திருவடிகளை நன்குகத் தொழுதெழுவாய்.

தொழுதெழு என்ற வினைக்கேற்ப நெஞ்சமே என்ற எழு வாய் வருவித்துரைக்கப்பட்டது.

வினைகள் கெட வேண்டுமென்பது மனத்தின் நினைப்பு. அது முடிய வேண்டுமாயின் இறைவனைத் தொழுதெழுவாய் என்று தமது நெஞ்சுக்கு அறுவுறுத்துமுகத்தால் உலகி னர்க்குப் பிள்ளையார் உபதேசித்தருளினர் எனக் கொள்க.

குலமதி — குலம் இங்கு உயர்வைக் குறித்தது, கொடி யிடை - கொடிபோலும் இடையையுடைய உமாதேவியார். பொருள்தரு என்றது இறைவர் திருமேனியில் ஒரு பொருளாகத் திகழ்ந்தது. அதாவது பாதிபாகத்தில் உமையம்மையார் குடி கொண்டது. கொடியிடை பொருள்தரு என்ற சொற்றொடர்க்கு இது தவிர வேறு சிறந்த பொருள் எமக்குத் தோன்றவில்லை. பிள்ளையார் திருவுள்ளம் யாதோ?

கொடியிடை பொருள்தரு என்பதைப் படுகளிறுக்கு அடை யாக்கிச் ''சுற்றிக் கொண்டிருக்கிற காட்டுக்கொடிகளின் இடையே பல பொருள்களைக் கொண்டுவருகின்ற இறந்த யானையினது'' எனப்பொருள் கூறினர் திருத்தருமபுரக் குறிப்பு உரையாசிரியர். இவ்வுரையின் பொருத்தம் ஆராய்ச்சிக்கு உரியது.

உரிபுதை உடலினன்—உரி அதாவது உரித்த தோலினல் போர்க்கப்பட்ட திருமேனியன்,

கதிர்மதியினன் — சந்திரனைத் தரித்தமையை பாடலின் முதலிலேயே கூறிவிட்டபடியால் இங்குக் கதிரையும் (சூரியனையும்) சந்திரனையும் தனது மூர்த்தங்களாக உடையவன் எனக்கொள்வது பொருத்தமாகும். சூரியன், சந்திரன், நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆன்மா இவையெட்டும் இறைவனின் அட்ட மூர்த்தங்களாகும்.

தலைமதி புனல்விட அரவிவை தலைமைய
தொருசடை யிடையுடன்
நிலைமரு வவொரிட மருளினன் நிழன்மழு
வினொடழல் கணையினன்
மலைமரு வியசிலை தனின்மதி லெரியுண
மனமரு வினன்நல
கலைமரு வியபுற வணிதரு கழுமலம்
இனிதமர் தலைவனே. 5

5. முதல் நாள் பிறைச்சந்திரன், கங்கையாறு, விடம் பொருந்திய பாம்பு இவைகளைப்பெருமை மிக்க தனது சடை முடியில் ஒருங்கே நிலையாக வசிக்க ஓரிடம் அருளியவனும், ஒளிபொருந்திய மழுவாயுதத்துடன் தீக்கடவுளாகிய அம்பை உடையவனும், (அக்கணையைக் கொண்டு) மேருமலையான வில்லால் மூன்று புரங்களையும் எரி உண்ணுமாறு மனம் பொருந்தினவனும், நல்ல கலைமான்கள் மருவிய காடுகள் அழகைத் தருகின்ற திருக்கழுமலம் என்னும் தலத்தில் இனிதாக எழுந்தருளிய தலைவனாகிய சிவபெருமானேயாவர்.

தலைமதி-தலை என்ற சொல் இங்கு முதல் என்ற பொருளைத் தரும். தலைப்பிள்ளை என்பது முதல் பிள்ளை எனப் பொருள் படுதல் காண்க.

தலைமையதொருசடை — இங்குத் தலைமை பெருமையைக் குறித்தது.

மனம் மருவுதல் — மனம் பொருந்துதல் அதாவது சங்கல்பித்தல்.

கலைமருவுதல் — கலைமான்கள் பொருந்தி வாழ்தல்,

வரைபொரு திழியரு விகள்பல பருகொரு
    கடல்வரி மணலிடை
கரைபொரு திரையொலி கெழுமிய கழுமலம்
    அமர்கன லுருவினன்
அரைபொரு புலியதள் உடையினன் அடியிணை
    தொழவரு வினையெனும்
உரைபொடி படவுறு துயர்கெட வுயருல
    கெய்தலொரு தலைமையே. 6

6. மலைகளின்மீது மோதி இறங்குகின்ற பல அருவிகளைப் பருகுகின்ற பெரிய கடலின் மணலில் கரையைப் பொருது எழுகின்ற அலைகளின் ஓசையோடு எப்பொழுதும் கூடியிருக்கிற திருக்கழுமலம் என்னுந்தலத்தினை விரும்பி எழுந்தருளிய கனல் உருவினனும், இடையிலே பொருந்திய புலியின் தோலை உடையாக உடையவனுமாகிய சிவபிரானது இருதிருவடிகளையும் தொழுதலால், வரக்கடவதாகிய வினை என்னும் சொல்லும் பொடியாகப்போக (அதனால்) துயர்கள் நீங்க, உயர்ந்ததான சிவலோகத்தை அடைதலும் உறுதியே யாகும்.

சொல்லே பொடிபடும் என்றதால் அச்சொல்லின் பொருளான வினை பொடிபடுதல் சொல்லாமலே விளங்கும். வினை பொடிபடுதலால் துயர்கள் நீங்கும். உயர் உலகமடைதலும் உறுதி என்பதாம்.

இவ்வாறின்றி, தலைமை என்பதற்கு முதன்மை, பெருமை, அதிகாரம் என்பனவாதியாகக் கொண்டு உயர் உலகில் ஒரு தலைமையை எய்துவர் எனப்பதிகப் பலன் கூறியருளிய தாகவுங்கொள்க.

முதிருறு கதிர்வளர் இளமதி சடையனை
    நறநிறை தலைதனில்
உதிருறு மயிர்பிணை தவிர்தசை யுடைபுலி
    யதளிடை இருள்கடி

கதிருறு சுடரொளி கெழுமிய கழுமலம்
அமர்மழு மலிபடை
அதிருறு கழலடி களதடி தொழுமறி
வலதறி வறியமே. 7

7. தேன் நிறைந்த மலர்கள் நிரம்பிய திருமுடியதனில் முதிர்ச்சியடையும் கதிர்கள் வளரும் இளம் பிறைச்சந்திரனை உடைய சடையையுடையவனும், உதிர்வதற்குரிய மயிர்கள் பிணைந்திருப்பதும் தசைகள் நீங்கப் பெற்றதுமான புலித் தோலை இடுப்பிலே உடையவனும், இருளைப்போக்கும் கிரணங்களுடன் கூடிய ஒளி எப்பொழுதும் மிக்கிருக்கும் திருக் கழுமலம் என்னும் தலத்தினை விரும்பி எழுந்தருளியிருக்கும் மழுப்படையினையேந்தினவனும், ஒலிக்கின்ற வீரக்கழல்களை அணிந்தவனுமாகிய சிவபிரானின் திருவடிகளைத் தொழும் அறிவு அல்லது பிறவெவற்றையும் அறியும் அறிவினை நாம் அறியோம். (திருவடிகளைத் தொழுதலையன்றி வேறு ஒன்றை நாம் அறியோம் என்பது கருத்து).

சிவபிரான் திருவடிகளைத் தொழுதலையல்லது வேறு ஒன்றையும் தாமறியாதவர் என்பதை "கைச்சிறு மறியவன் கழலாற்பேணுக் கருத்துடை ஞானசம்பந்தன்" எனப்பிள்ளையார் மற்றொரு பதிகத்திலும் அருளிச்செய்துள்ளார். (1-ம் திரு முறை 77 - ம் பதிகம், 11 - ம் திருப்பாடல்). மற்றும் வரும் இடங்களில் கண்டு கொள்க.

இதே கருத்தை சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாமருளிய திருத்தொண்டத்தொகையில்

"வம்பரு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற்பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்"

என அமைத்துப் பாடியருளியுள்ளார்.

கடலென நிறநெடு முடியவ னடுதிறல்
தெறவடி சரணென
அடல்நிறை படையரு ளியபுக ழரவரை
யினனணி கிளர்பிறை

விடம்நிறை மிடறுடை யவன்விரி சடையவன்
விடையுடை யவனுமை
உடனுறை பதிகடன் மறுகுடை யுயர்கழு
மலவியன் நகரதே. 8

8. கடலையொத்த நிறத்தையுடையவனும் நீண்ட கிரீடத்தை அணிந்தவனுமாகிய இராவணனது போர்வலி (இறைவன் திருவிரலால் நெருக்கப்பட்டு) அழிய, (பிறகு அவன்) திருவடியே அடைக்கலம் என்று துதித்துப் பாட அவனுக்கு வலிமை மிக்க வாளாயுதத்தை அருளிச்செய்த புகழையுடையவனும், பாம்பினை இடையில் கட்டியவனும், அணியாகத் திகழ்கின்ற பிறைச்சந்திரனைத் தரித்தவனும், விஷம் நிறைந்த கழுத்தினையுடையவனும், விரிந்த சடையை உடையவனும், எருதினை ஊர்தியாகவுடையவனுமாகிய சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளியிருக்கின்ற திருப்பதி, கடலுங்கலங்கிய காலத்துத் தான் உயர்ந்து விளங்கிய திருக்கழுமலம் என்ற பெருமை மிக்க நகராகும்.

கடல் மறுகு உடை உயர்கழுமலம் — பிரளயவெள்ளமே இங்குக் கடல் கலங்குங்காலம் எனப்பட்டது. அதில் ஆழாது கழுமலம் உயர்ந்து விளங்கிய தலபுராணச்செய்தி இதனால் கூறப்பட்டது. 'தோடுடையசெவியன்' எனத் தொடங்கும் பிள்ளையாரின் முதல் திருப்பதிகத்தில் 5 - வது திருப்பாடலில் ''கருமை பெற்ற கடல் கொள்ள மிதந்ததோர் காலம்மிது வென்னப் பெருமை பெற்ற பிரமாபுரம்'' என அருளிச்செய்யப் பட்டதும் காண்க. (1 - ம் தமிழ்மாலை பக்கம் 9)

கொழுமல ருறைபதி யுடையவன் நெடியவ
னெனவிவர் களுமவன்
விழுமையை யளவறி கிலரிறை விரைபுணர்
பொழிலணி விழவமர்

கழுமல மமர்கன லுருவினன் அடியிணை
தொழுமவ ரருவினை
எழுமையு மிலநில வகைதனி லெளிதிமை
யவர்விய னுலகமே. 9

9. அழகுடைய தாமரைமலரைத் தனது உறைவிடமாகக் கொண்ட பிரமதேவனும், நெடியவனான திருமாலும் ஆகிய இவர்கள் சிவபெருமானது மாட்சிமையைச் சிறிதளவும் அறிந்துகொள்ளவில்லை. (அறிய இயலவில்லை என்பது கருத்து). (அத்தகைய பெருமையனும்) மணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்ததும் திருவிழாக்கள் நடைபெறுதலையும் உடைய திருக்கழுமலம் என்னும் தலத்தில் விரும்பி உறைபவனும், கனல் உருவினனுமான சிவபிரானது இரண்டு திருவடிகளையும் தொழுதலையுடையவர்களது நிலவுலகில் நுகர்ந்தாலன்றி நீங்கா வினைகள் ஒழிதலேயன்றி மீண்டுத் தோன்றுதலும் இல்லையாகி, இமையவர்களது பெருமை மிக்க உலகமும் அவர்கட்கு அடைவது எளிதாகும்.

கொழுமை — நிறம், அழகு, செழுமை, இளமை முதலிய பொருள்கள்

அவன் -சிவன் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்ற முதுமொழியுங் காண்க

அருவினை — நீங்குதற்கு அரிய வினைகள்

எழுமையும் இல — எழுமை எழுதல், தோன்றுதல் என்ற பொருளில். வந்தது 'எழுமையும்' என்பதில் உள்ள 'உம்' மையால் அருவினைகள் நீங்குதலேயன்றி மீண்டும் எழுதலும் இல்லையாம் என உரைகொள்ளப்பட்டது.

அமைவன துவரிழு கியதுகி லணியுடை
யினரமண் உருவர்கள்
சமையமும் ஒருபொரு ளெனுமவை சலநெறி
யனவற வுரைகளும்

இமையவர் தொழுகழு மலமம ரிறைவன
    தடிபர வுவர்தமை
நமையல வினைநல னடைதலி லுயர்நெறி
    நனிநணு குவர்களே. 10

10. (உடல் மீது) பொருந்துவனவாகிய காவிச்சாயம் தோய்ந்த ஆடையினை உடுப்பவர்களான பௌத்தர்களும், ஆடையற்ற உருவமுடையவர்களான சமணர்களும் ஆகிய புறச்சமயிகள் ஒரு பொருளாகக் கூறும் அவர்களது சமயங்களும், அவற்றில் அவர்கள் கூறும் அறவுரைகளும் ஆகிய அவைகள் வஞ்சனை நெறியனவாகும். தேவர்கள் தொழுகின்ற திருக்கழுமலம் என்ற தலத்தில் அமர்ந்துள்ள இறைவனாகிய சிவபிரானது திருவடிகளை வணங்குபவர்களை வினைகள் வருத்தாவாம். (மற்றும்) நன்மையடைதலின் மிக உயர்ந்ததான மோட்சமார்க்கத்தினை அடைவார்கள் (புறப்புறச்சமயிகளின் அறவுரை வஞ்சனை நெறியில் உய்க்கும். சிவனதடியினைப் பரவுபவர்கள் தம் வினைகள் வலியிழந்து போக மோட்சநெறியை அடைவார்கள். எனவே சிவனடியே பரவுக என்று உபதேசத்தருளியதாகக் கொள்க)

அமண் உருவர் — அம்மணம் (நிர்வாண) உருவர், சமணர்கள்.

நமையல—வருத்தம் உண்டாக்காது. நமைத்தல் என்னும் சொல் துன்புறுத்துதல், வருத்துதல் என்னும் பொருளில் வந்தது. உடலில் சொறி, சிரங்கு இவைகளால் ஏற்படும் தினவு என்னும் துன்பத்தை நமைச்சல் என்று கூறுதலுங் காண்க.

வினை நலனடைதலின் நமையல எனக் கூட்டி உரைப்பினும் பொருந்தும்.

உயர் நெறி-உயர்ந்ததான மோட்ச நெறி, ஞானமார்க்கம் அல்லது சன்மார்க்கம் எனக்கொள்க. ''......ஞானத்தாலரனை அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோரெல்லாம்'' என்பது சிவ

ஞானசித்தியர். சாதனவியல், 8-ம் சூத்திரம், 2-ம் அதிகாரம், 23-வது திருவிருத்தம்).

பெருகிய தமிழ்விர கினன்மலி பெயரவ
  னுறைபிணர் திரையொடு
கருகிய நிறவிரி கடலடை கழுமலம்
  உறைவிட மெனநனி
பெருகிய சிவனடி பரவிய பிணிமொழி
  யனவொரு பதுமுடன்
மருவிய மனமுடை யவர்மதி யுடையவர்
  விதியுடை யவர்களே. 11

திருச்சிற்றம்பலம்.

11. பெருகிய தமிழ் விரகினனும், நிறைந்த புகழை உடையவனுமான திருஞானசம்பந்தன், நீர்த்துளிகளோடு மடங்குதலையுடைய அலைகளோடு கருமையான நிறத்தையும் உடைய அகன்ற கடலையடுத்த திருக்கழுமலம் என்னும் தலத்தை உறைவிடமாகக் கொண்ட மிகவும் பெருமையுடன் கூடிய சிவபிரானது திருவடிகளைத் துதித்துப்பாடிய அன்பினால் பிணைக்கும் மொழிகளான ஒரு பத்துப்பாடல் களையும் ஒருங்கே பொருந்திய மனமுடையவர்கள் அறிவு உடையவர்களாவர், மற்றும் பாக்கியமுடையவர்களும் ஆவர்.

பெருகிய தமிழ் விரகினன் – தமிழ் மொழியில் பேரறிஞன். பெயர் — புகழ். உறை — நீர்த்துளி. பிணர்திரை — மடங்கு கின்ற அலை. பிணிமொழி — அன்பு ஊட்டும் மொழிகள்.

மருவிய மனம் — அப்பாடல்களைப் பாடித்துதித்தலில் ஈடு பட்ட மனம். விதி — பாக்கியம், செல்வம் என்ற பொருளில் வந்தது.

அறிவுடையராதலும் செல்வமுடையராதலும் இப்பதிகப் படனத்தின் பலன் எனக்கொள்க.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கழுமலம்—2

பண்—குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

அயிலுறுபடையினர் விடையினர்முடிமேல்
அரவமும்மதியமும் விரவியவழகர்
மயிலுறுசாயல வனமுலையொருபால்
மகிழ்பவர்வானிடை முகில்புல்குமிடறர்
பயில்வுறுசரிதையர் எருதுகந்தேறிப்
பாடியுமாடியும் பலிகொள்வர்வலிசேர்
கயிலையும்பொதியிலும் இடமெனவுடையார்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 1

பதிகப்பொழிப்புரை: 1, கூர்மையுடைய சூலப்படையினை உடையவரும், திருமுடிமீது பாம்பையும் சந்திரனையும் கலந்து (ஒன்ருக) வைத்திருக்கும் அழகரும், மயிலையொத்த சாயல் உடையவளும் அழகிய திருமுலைகளையுடையவளுமான உமா தேவியாரை ஒருபக்கத்தில் வைத்து மகிழ்பவரும், வானத்திலேயுள்ள மேகத்தினையொத்த (நிறமுடைய) கழுத்தை உடையவரும், பயிலுகின்ற பல புகழ்ச்சரிதைகளையுடையவரும், எருதின்மீது மகிழ்ச்சியுடனேறிச்சென்று பாடியும் ஆடியும் பிச்சை கொள்பவரும், வலிமைமிக்க திருக்கயிலையையும் பொதியமலையையும் தமது இருப்பிடமாக உடையவரும் ஆகிய சிவபிரானுரது திருத்தலமாகிய திருக்கழுமலத்தினை நினைத்தலால் நமது வினையாகிய குற்றம் அகன்றுபோகும்.

பயில்வுறுசரிதையர் — சரிதை என்பது இங்கு வரலாறுகளைக் குறித்தது. எனவே பல புகழ்களையடக்கிய வரலாறுகளை உடையவர் என்று கொள்க.

பயிலுதல்—சொல்லுதல், நிறைதல், சேவித்தல், பழகுதல் போன்ற பொருள்களைத்தரும். கரிசு — குற்றம், தீங்கு.

கொண்டலும்நீலமும் புரைதிருமிடறர்
கொடுமுடியுறைபவர் படுதலைக்கையர்
பண்டலர்அயன்சிரம் அரிந்தவர்பொருந்தும்
படர்சடையடிகளார் பதியதனயலே
வண்டலும்வங்கமுஞ் சங்கமுஞ்சுறவும்
மறிகடல்திரைகொணர்ந் தெற்றியகரைமேல்
கண்டலும்கைதையும் நெய்தலுங்குலவும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 2

2. மேகத்தையும் கருங்குவளையையும் ஒத்த அழகிய கழுத்தினையுடையவரும், மலையினுச்சியில் உறைபவரும், கபாலத்தைக் கையிலே உடையவரும், முன் ஒரு காலத்தில் தாமரைமலரில் உறையும் பிரமதேவனின் தலையை அறுத்தவரும், படர்ந்த சடையினையுடைய தலைவருமாகிய சிவபெருமானுர் பொருந்தும் பதியும், அதன் அயலே வண்டலும், தோணிகளும், சங்குகளும், சுருமீன்களுமாகியவற்றை மறித்து எழும் கடல் அலைகள் கொணர்ந்து தள்ளிய கடற்கரையின் மீது நீர்முள்ளியும், தாழையும், நெய்தல் பூவும் விளங்குகின்றதுமான திருக்கழுமலத்தினை நினைய நமது வினையாகிய குற்றம் நீங்கும்.

கொண்டல் — மேகம். நீலம் — நீலோத்பல மலர்.

எண்ணிடையொன்றினர் இரண்டினருருவம்
எரியிடைமுன்றினர் நான்மறையாளர்
மண்ணிடைஐந்தினர் ஆறினர்அங்கம்
வகுத்தனரேழிசை எட்டிருங்கலைசேர்
பண்ணிடையொன்பதும் உணர்ந்தவர்பத்தர்
பாடிநின்றடிதொழ மதனனைவெகுண்ட
கண்ணிடைக்கனலினர் கருதியகோயில்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 3

3. ஆராய்ச்சியில் சொருபசிவம் என்ற ஒன்றேயாக இருப்பவர். உருவங்கொள்ளும் போது சிவம் என்றும் சத்தி என்றும் இரண்டுருவாக இருப்பவர், தீயினில் மூன்றாக இருப்பவர், நான்கு வேதங்களாக இருப்பவர், மண்ணிடை ஐந்து தன்மாத்திரைகளாக இருப்பவர், ஆறு வேதங்களாக இருப்பவர், ஏழு இசைகளை வகுத்தவர், எட்டு இருங்கலைகள் சேரும் பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவராக இருப்பவர், பக்தர்கள் பாடி நின்றடி தொழுமாறு இருப்பவர், மன்மதனைக் கோபித்த கண்ணிடத்தே நெருப்பையுடையவர் (என இத்திறப்பட்ட பெருமைகள் உடைய) சிவபிரான் விரும்பியிருக்க எண்ணங் கொண்ட கோயிலாகிய திருக்கழுமலத்தை நினைக்க நமது வினைமாசுகள் அற்றுப்போம். (இத்திருப்பாடலில் ஒன்று முதல் பத்து வரை எண்கள் வந்தது எண்ணலங்காரம் எனப் படும்).

எண்ணிடை — 'எண்' இங்கு ஆராய்ச்சி, எண்ணம் போன்ற பொருளில் வந்ததாகக் கொள்க.

எரியிடை மூன்றினர் — எரியிடை மூன்று என்பது ஓசை, ஒளி, ஊறு என்ற மூன்றையும் குறிக்கும்.

நான்மறை, ஆறங்கம் — முன்னர் வந்த இடங்களில் கூறியது இங்கும் கொள்க.

மண்ணிடைஐந்து — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

ஏழுஇசை — இசை என்பது காரணப்பெயர். பல இயற் பாக்களோடு நிறத்தை இசைத்தலால் இசையென்று பெயரா யிற்று. நிறம் என்பது 'ராகம்' என்ற வடசொல்லோடு ஒத்த பொருளைத்தரும் சொல். இசைக்குரிய சுரங்கள் ஏழாகும். இவ் வேழு இசைகளையும் தனித்தனி நரம்புகளில் இசைத்து அறி யும் முறையில் அக்காலத்தில் கருவிகள் அமைந்திருந்தன. இவ்வேழிசைகளையும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற பெயர்களால் பண்டைத் தமிழர் வழங்கினர். இவ்வேழிசைகளையும் இறைவரே வகுத்தனர்.

அவரே எல்லாக் கலைகளுக்கும் இறைவராதலின் என்று கொள்க.

எட்டிருங்கலை சேர் பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர்: — எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்னும் எண்வகைத் தொழிலும் சேர்த்துப் பண்ணியமைத்தது பண் என்பதாகும். இதனால் பண் என்பதும் காரணப்பெயரே என்று கொள்க. இங்ஙனம் பண்ணியமைத்த பண்ணானது ஒன்பது இலக்கணங்களால் உணர்தல்பாலது. அவ்வொன்பது இலக்கணம் பற்றி சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் அடியார்க்கு நல்லார் "இசைப்புலவன் ஆளத்தி (ஆளத்தி என்பது ஆலாபனை என்று இக்காலத்தே வழங்கப்படுகிறது.) வைத்த பண்ணீர்மையை முதலும், முறையும், முடிவும், நிறையும், குறையும், கிழமையும், வலிவும், மெலிவும், சமனும், வரையறையும், நீர்மையும் என்னும் பதினொரு பாகுபாட்டினாலும் அறிந்து அறிந்த வண்ணம் அவன் தாளநிலையில் எய்தவைத்த நிறம் தன்கவியினிடத்தே தோன்ற வைக்க வல்லனாய்" எனத் தம் உரையில் விளக்கியுள்ளார். இப்பதினொரு இலக்கணங்களுள் வரையறையும், நீர்மையும் நீங்கலாக எஞ்சிய ஒன்பதும் திருஞான சம்பந்தர் காலத்தில் கொள்ளப்பட்டன என்பதையே பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர் என்று குறிப்பிட்டருளியதாகக் கொள்க, இனி எட்டிருங்கலை என்பதற்கு யாழ்க் கருவியிலே இசையெழுப்புவதற்குச் செய்யும் பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் எட்டினையும் இசை நிலையின் தீதின்மை ஆராய்தற்குச் செய்யும் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்னும் எட்டினையும் ஒருங்கே குறிக்கும் எனக் கொள்வர் யாழ்நூலார், (மேலும் விரிவு வேண்டுவோர் திரு. விபுலானந்த அடிகள் இயற்றிய யாழ்நூலில் பண்ணியல் என்ற பகுதியில் கண்டு கொள்க. நூல் 2-ம் பதிப்பு, 155-ம் பக்கம்)

எரியொருகரத்தினர் இமையவர்க்கிறைவர்
ஏறுகந்தேறுவர் நீறுமெய்பூசித்
திரிதருமியல்பினர் அயலவர்புரங்கள்
தீயெழவிழித்தனர் வேய்புரைதோளி
வரிதருகண்ணிணை மடவரலஞ்ச
மஞ்சுறநிமிர்ந்ததோர் வடிவொடும்வந்த
கரியுருமருவிய அடிகளுக்கிடமாம்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 4

4. தீயினை ஒரு கரத்திலே உடையவரும், தேவர்களுக்குத் தலைவரும், எருதினைத் தமது வாகனமாக விரும்பி ஏறுபவரும், திருநீற்றினை உடம்பில் பூசித் திரியும் இயல்பினரும், பகைவர்களது மூன்று புரங்களும் தீப்பற்றுமாறு நெற்றிக்கண்ணால் பார்த்தவரும், மூங்கிலை யொத்ததோளையும் செவ்வரிபடர்ந்த கண்களையுமுடைய உமாதேவியார் அஞ்சும் படி வானளாவ உயர்ந்த வடிவொடும் வந்த யானையின் (உரித்த) தோலைத் தன்னுடம்பிலே போர்த்தியருளிய தலைவருமாகிய சிவபிரானது இடமாகிய திருக்கழுமலத்தினை நினைய நம் வினைமாசுகள் அற்றுப்போம்.

அயலவர் - இங்குப் பகைவர் என்ற பொருளில் வந்தது.

தீயெழவிழித்தனர் - முப்புரங்களையும் இறைவர் தமது நெற்றிக் கண்ணாலேயே எரித்தனர் என்பது கூறப்பட்டது. அவரது கையில் வில்லும் அம்பும் இருந்தும் அவை மிகையேயாம் என்பதை மாணிக்கவாசகர் கூறியருளியது காண்க.

ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற.

(திருவாசகம், திருவுந்தியார் - 2)

(இதன் பொருள்) கச்சியேகம்பத்தில் கோயில் கொண்ட பெருமான் ஏகம்பர் எனப்படுவர். அவர்தம் திருக்கையில் இரண்டு அம்புகள் காணப்படவில்லை. இருந்தது ஒரு அம்பேயாம். அந்த ஓரம்பும் அவர்க்குப் பயன்படாது பயனில்

பாரமாகவேயிருந்தது, இந்த பெருமையினைப் பாடி உந்திப் பறந்து விளையாடுவோமாக. (பயன்படாத காரணம் பெருமான் தம் விழியினாலேயே பார்த்து எரித்தமையா லென்க. சிரித்துப் புரமெரித்ததாகவும் கூறுவதுண்டு. சிரித்த லும் விழித்தலும் ஒருங்கே நிகழ்ந்திருக்கக்கூடும் என்க.)

வேய் - மூங்கில், வரி-கண்களில் படர்ந்த செவ்வரி இதனை உத்தமமான பெண்களின் இலக்கணமாகக் கூறுவர்.

மடவரல் - பெண், இங்கு உமாதேவியாரைக் குறித்தது.

மஞ்சு - மேகம், இங்கு மேகம் தங்குதற்கிடமான ஆகா யத்தைக் குறித்ததாகக் கொள்க.

அடிகள் - கடவுள், குரு, தலைவன், முனிவர், மூத்தோன் முதலிய பொருள்கள்.

ஊரெதிர்ந்திடுபலி தலைகலனாக
உண்பவர்விண்பொலிந் திலங்கியவுருவர்
பாரெதிர்ந்தடிதொழ விரைதருமார்பில்
படவரவாமையக் கணிந்தவர்க்கிடமாம்
நீரெதிர்ந்திழிமணி நித்திலமுத்தம்
நிரைசுரிசங்கமொ டொண்மணிவரன்றிக்
காரெதிர்ந்தோதம்வன் திரைகரைக்கெற்றும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 5

5. ஊரார் எதிர்வந்து இடுகின்ற பிச்சையுணவினைத் தலையோட்டினைக் கலமாகக் கொண்டு ஏற்று உண்பவரும், வானாளவ உயர்ந்து விளங்கிய உருவத்தையுடையவரும், நில வுலகத்திலுள்ளவர் எதிர்வந்து தொழும்படி மணம் மிகுந்த மார்பினில் படத்தையுடைய பாம்பையும் ஆமையையும் உருத்திராக்கமும் அணிந்தவருமான சிவபிரானார்க்கு இட மாகிய, நீரினின்றும் எதிர்ந்து இழிகின்ற இரத்தினம், நித் திலம், முத்து, வரிசையான சங்குகள், மற்றும் ஒளிவீசும் மணி கள் ஆகியவை ஒலி செய்ய அவைகளைக் கடலில் தோன்றும் நீர்ப்பெருக்கத்தின் வலிய அலைகள் கரைக்கு அடித்துத் தள்ளு

தலையுடைய திருக்கழுமலத்தினை நினைய நமது வினைமாசுகள் அற்றுப்போம்.

நித்திலம், முத்து - ஒரே பொருளைத் தரும் சொற்களாம்.

எதிர்தல் - சந்தித்தல், தோன்றல், மலைதல், மாறுபடுதல் முதலிய பொருள்களைத்தரும்.

முன்னுயிர்த்தோற்றமும் இறுதியுமாகி
முடியுடையமரர்கள் அடிபணிந்தேத்தப்
பின்னியசடைமிசைப் பிறைநிறைவித்த
பேரருளாளனுர் பேணியகோயில்
பொன்னியல்நறுமலர் புனலொடுதூபம்
சாந்தமுமேந்திய கையினராகிக்
கன்னியர்நாடொறும் வேடமேபரவும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 6

6. முதலில் உயிர்களுக்குத் தோற்றமும், (பின்) இறுதியும் செய்பவராகி, கிரீடங்களணிந்த தேவர்கள் திருவடிகளில் பணிந்து துதிக்கும்படி, பின்னிய திருச்சடையின்மீது பிறைச் சந்திரனை நிலைபெற நிறுத்திய பேரருளாளராகிய சிவபிரான் விரும்பிய கோயிலும், பொன்னிறம் பொருந்திய நறிய மலர்கள், புனல் இவற்றோடு தூபம் சாந்தம் ஆகியவற்றை ஏந்திய கைகளையுடையவராய்க் கன்னியர்கள் நாள்தோறும் சென்று எம்பிரானின் திருக்கோலத்தைப் பரவுதலையுடையதுமான திருக்கழுமலம் நினைய நம் வினைமாசுகள் அற்றுப்போம்.

உயிர்த்தோற்றம், இறுதி-உயிர்களை உடம்போடு சேர்த்தல் ஆகிய பிறப்பும், அவற்றைப் பிரித்தலாகிய இறப்புமாகிய இரண்டினையுங் குறித்தது,

வேடம் - திருக்கோயிலில் எழுந்தருளிவிக்கப்பட்ட இறைவனது திருமேனியின் திருக்கோலம், சிவலிங்க மூர்த்தம் எனக் கொள்க.

கொலைக்கணித்தாவரு கூற்றுதைசெய்தார்
குரைகழல்பணிந்தவர்க் கருளியபொருளின்
நிலைக்கணித்தாவர நினையவல்லார்தம்
நெடுந்துயர்தவிர்த்தவெம் நிமலருக்கிடமாம்
மலைக்கணித்தாவர வன்றிரைமுரல
மதுவிரிபுன்னைகள் முத்தெனவரும்பக்
கலைக்கணம்கானலின் நீழலில்வாழும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 7

7. உயிரை உடலினின்றும் பிரிக்கும் செயலாகிய கொலையை அணியதாக்க வருகின்ற இயமனை உதை செய்த பெருமானும், தமது ஒலிக்கின்ற கழல்களணிந்த திருவடிகளை வணங்கியவர்களான சனகாதியராம் நால்வர்க்கு அருளிச் செய்த பொருளின் (சின்முத்திரை கூடிய மோனநிலையின்) நிலைமைக்கு அணுகிவர நினைய வல்லார்தம் பிறவிக்கடலாகிய நெடுந்துயர் தவிர்த்த எமது நிமலருமான சிவபெருமானுக்கு இடமாகியதும், மலைக்கு ஒப்பாக வருவதற்கு வலிய கடலலை கள் ஒலித்து எழுதலும், தேன் சொட்டும் புன்னைமலர்கள் முத்துக்கள் போலத் தோன்றுதலும், மான்கூட்டங்கள் கடற் கரைச் சோலையின் நிழலில் வாழ்தலுமுடையதுமான திருக்கழு மலத்தை நினைய நமது வினைமாசுகள் அற்றுப்போம்.

கொலை - இங்கு உடம்பினின்றும் உயிரைப்பிரிக்கும் இயமன் செயலைக் குறித்தது.

நெடுந்துயர் - பிறவித்துயர். தவிர்த்த-இறைவனார் அருள் செய்யும் விரைவுபற்றி தவிர்த்த என இறந்த காலத்தால் கூறப்பட்டது.

மலைக்கணித்தாவர - மலைக்கு + அணித்தா + வர எனப் பிரித்து மலைக்கு இணையாக வர எனப்பொருள்கொண்டோம். வேறு பொருள் பொருந்துமோ? ''தோணி மலைக்கு வலிய அலைகள் அணுகி வரவும்'' எனக்கொண்டனர் திருத்தருமபுர குறிப்புரையாசிரியர். பொருந்து மேல் கொள்க,

அரும்புதல் - தோன்றுதல் என்ற பொருளில் வந்தது. கலைக்கணம் - மான்கூட்டம். கானல் - கடற்கரைச்சோலை.

புயம்பலவுடையதென் னிலங்கையர்வேந்தன்
பொருவரையெடுத்தவன் பொன்முடிதிண்டோள்
பயம்பலபடவடர்த் தருளியபெருமான்
பரிவொடுமினிதுறை கோயிலதாகும்
வியன்பலவிண்ணினும் மண்ணினுமெங்கும்
வேறுவேறுகங்களிற் பெயருளதென்னக்
கயம்பலபடக்கடல் திரைகரைக்கெற்றும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 8

8. திருக்கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்தலில் முயன்றவனான இருபது தோள்களையுடைய தென்னிலங்கையரது அரசனான இராவணனது பொன்முடிகளும் திண்ணிய தோள்களும் பலவகையிலும் அச்சப்படும்படி நெருக்கியருளிய சிவபிரான் மிக்கபரிவுடன் இனிதே எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாகியதும், அகன்ற பல விண்ணுலகங்களிலும், மண்ணுலகத்திலும், மற்றும் எங்கும் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு பெயருடையது எனப்பிரசித்தமாய் விளங்குவதும், பெருமைகள் பலவும் விளங்கும்படி (பல அரிய பொருள்களை) கடலலைகள் கரைக்கு அடித்துத் தள்ளுதலையுடையதுமான திருக்கழுமலத்தை நினைய நம் வினை மாசுகள் அற்றுப்போம்.

பரிவு—அன்பு: இனிது உறை கோயில் — மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருக்கும் கோயில்.

விண் — விண்ணுலகம். மண் — நிலவுலகு. எங்கும் — விண், மண் தவிர்ந்த மற்றைய உலகங்களைக் குறித்தது. இவ்வாறான உலகங்களில் எல்லாம் சீகாழியின் பெயர்கள் பன்னிரெண்டு என்பதும் அவை வேறு வேறு யுகத்தில் வேறு வேறு காரணம் பற்றி ஏற்பட்டவை என்றும் குறிப்பிட்டருளியது கண்டு கொள்க. இஃதறியாதார் சிலர் இவை பன்னிரண்டும் வேறு வேறு பெயர்கள் அல்ல என்றும், இவை சீகாழியின்

வேறு வேறு பகுதிகள் என்றும்,இவை ஒன்று சேர்ந்து சீகாழி என்று வழங்கலாயிற்று என்றும் கூறுவர். உதாரணமாகத் திருவல்லிக்கேணி, மயிலாப்பூர்,எழும்பூர், மாம்பலம் முதலிய பகுதிகள் ஒன்று சேர்ந்து சென்னை என வழங்குதல் போல என்றும் கூறுவர். இது பொருந்தாக்கூற்று என்பது மட்டும் அல்லாது திருஞானசம்பந்தர் திருவுள்ளத்துக்கும், சேக்கிழார் பெருமானின் கருத்துக்கும் முரண் படுவதாமென்றும் உணர்ந்து கொள்க.

விலங்கலொன்றேந்திவன் மழைதடுத்தோனும்
வெறிகமழ்தாமரை யோனுமென்றிவர்தம்
பலங்களால்நேடியும் அறிவறிதாய
பரிசினன்மருவிநின் றினிதுறைகோயில்
மலங்கிவன்திரைவரை யெனப்பரந்தெங்கும்
மறிகடலோங்கிவெள் இப்பியுஞ்சுமந்து
கலங்கடன்சரக்கொடு நிரக்கவந்தேறும்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 9

9. ஒருமலையை (கோவர்த்தனம் எனப்படும் மலை) ஏந்தி மழையினைத் தடுத்தவனாகிய திருமாலும், மணங்கமழ்கின்ற தாமரை மலரில் உறைபவனாகிய பிரம்மதேவனுமாகிய இவர்கள் தமது ஆற்றலால் தேடியும் அறிவதற்கு அரிய தாகிய தன்மையனான சிவபிரான் பொருந்தி இருந்து இனிதாக உறைகின்ற கோயிலாகிய, கடல் கலங்கி மடங்கி எழும் வலிய அலைகள் எங்கும் பரந்து மலையைப்போல ஓங்கி வெண்மையான சங்குகளையும் சுமந்துகொண்டு வர, மரக்கலங்கள் அவற்றில் ஏற்றப்பட்ட சரக்குகளுடன் வரிசையாக வந்து கரை சேருகின்ற திருக்கழுமலத்தை நினைய நமது வினை மாசுகள் அற்றுப்போம்.

மலையை ஏந்தி மழைதடுத்தவன் கிருட்டிணன். இவன் செயலைத் திருமாலுக்கேற்றியது பற்றி 32-33ம் பக்கம் 8-வது திருப்பாடல் உரைக்குறிப்பில் உரைத்தது இங்கும் கொள்க. மேல் வருமிடங்களிலும் இங்ஙனமே கொள்க.

பலங்கள்—ஆற்றல், உடல்பலம். பரிசு-தன்மை, இங்குப் பெருமையைக் குறித்தது. அதனையுடையவர் பரிசினர். மலங்குதல் - கலங்குதல், கடல் கொந்தளித்தல். இப்பி—சங்கு, முத்துச்சிப்பி முதலியன. நிரக்க — வரிசையாக.

ஆம்பலதவமுயன் றறவுரைசொல்லும்
அறிவிலாச்சமணரும் தேரருங்கணிசேர்
நோம்பலதவமறி யாதவர்நொடிந்த
மூதுரைகொள்கிலா முதல்வர்தம்மேனிச்
சாம்பலும்பூசிவெண் தலைகலனுகத்
தையலாரிடுபலி வையகத்தேற்றுக்
காம்பனதோளியொ டினிதுறைகோயில்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 10

10. தவம் (என்ற பெயரால்) பல (அவங்களை) முயன்று செய்து மக்களுக்கு அறவுரை சொல்லப்புகும் அறி வில்லாச் சமணர்களும், கணிகை நோன்பு என்பது அல்லாது வேறு தவமொன்றும் அறியாதவர்களான பௌத்தர்களும் ஆகிய புறப்புறச்சமயிகளது மூதுரை என்று சொல்லும் பாழடைந்த உரைகளைக் கொள்கிலாது, தமது திரு மேனியின் மீது சாம்பலைப்பூசியும் வெண்தலையைப் பாத்திரமாகக் கொண்டு உலகத்தில் பெண்கள் இடுகின்ற பிச்சையினை ஏற்றும் மூங்கில் போன்ற தோளையுடைய உமாதேவியாரோடு முழுமுதற்கடவுளான சிவபிரானுர் இனிதே எழுந்தருளி யிருக்கும் திருக்கழுமலத்தினை நினைய நமது வினைமாசுகள் அற்றுப்போம்.

நொடிந்த முதுரை கொள்கிலாது, முதல்வர் இனிதுறை கோயில் கழுமலம் நினைய நம் வினை கரிசறுமே என்று இயைத்துப் பொருள் கொள்க.

ஆம் பல தவமுயன்று - இதை தவம் ஆம் பல முயன்று என்று தக்கபடி இயைத்துக் கொள்க. பல என்பதோடு அவம் என்ற சொல்லை வருவித்து தவமாகிய பல அவங்கள் என்று

கொள்ளப்பட்டது. தவம் என்ற பெயரில் சமணர்கள் செய்யும் அவமாவன:

தலைபறித்தல், உடையினை நீத்தல், நீராடாமை, சுடு பாறையிற்கிடத்தல், பல்விளக்காமை, நின்றுண்ணல், ஒரு நாளைக்கு ஒரு பொழுதேயுண்ணல் இவையேழும் சமணர்களுடைய ஒழுக்கமுறையாகும். மற்றும் மயில் தோகைகளால் தடவிக்கொண்டு வழி நடத்தல், இரவில் உண்ணாமை, உறியில் அமர்ந்து உறங்குதல், உண்ணும்போது உரையாடாமை முதலிய பல நியமங்களையும் அக்காலச் சமணத்துறவிகள் தமக்குரிய சிறப்புடைய தவச்செயல்களாக மேற் கொண்டு ஒழுகினர். திருநாவுக்கரசு சுவாமிகளும் தமது திருப்பதிகங்களில் சமணர்களின் அவச்செயல்களை விரிவாகக் கூறியருளி உள்ளார்கள்.

கணிசேர் நோன்பு—பௌத்தர்கள் உலகம் முற்கணத்தில் தோன்றியது பிற்கணத்தில் இல்லையாய்க் கணந்தோறும் அழியும் இயல்புடையது, எனவே எல்லாம் பாழே என்பர். இது சூன்யவாதம் எனவும் படும். இங்ஙனம் கணந்தோறும் எல்லாப் பொருள்களும் தோன்றியழிவன என்னும் புத்தமதக் கோட்பாட்டைக் கொண்டு அவர்கள் கணபங்கவாதிகள் எனப் பட்டனர். திருஞானசம்பந்தர் இவர்களைக் கணிகை நோன்பர் என்று குறிப்பிடுவர். அதனையே இத்திருப்பாடலில் கணிசேர் நோன்பு எனக் குறிப்பிட்டருளியதாகக் கொள்க. இதனைத் தவிர வேறு நோன்பு ஏதும் அறியாதவர் பௌத்தர் எனக் கொள்க. திருமுறைக்கலைஞர் திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள் நூலைத்தழுவி இவ்விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. (பன்னிருதிருமுறை வரலாறு, முதற்பகுதி, பக்கம் 685)

இவ்வாறின்றி, கணிசேர் — நூலுரைகளில் பொருந்திய, நோன் பல தவம் அறியாதவர்—நோன்பின் ஆம் பயனைத் தரும் தவத்தை அறியாதவர்கள், எனக் கொண்டனர் இராணிப் பேட்டை புலவர் திரு. பி. மா. சோ அவர்கள். பிள்ளையார் திருவுள்ளக்கிடக்கை யாதோ?

கலிகெழுபாரிடை ஊரெனவுளதாங்
கழுமலம்விரும்பிய கோயில்கொண்டவர்மேல்
வலிகெழுமனம்மிக வைத்தவன்மறைசேர்
வருங்கலைஞானசம் பந்தனதமிழின்
ஒலிகெழுமாலையென் றுரைசெய்தபத்தும்
உண்மையினால்நினைந் தேத்தவல்லார்மேல்
மெலிகெழுதுயரடை யாவினைசிந்தும்
விண்ணவராற்றலின் மிகப்பெறுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

11. மிக்க ஒலியுடைய உலகத்தில் (சிறந்த) ஊரென உள்ளதாகிய திருக்கழுமலத்தைத் தனக்கு மிக்க விருப்பமுடைய கோயிலாகக் கொண்ட சிவபெருமான் மீது மிக்க உறுதியான மனத்தை மிக வைத்தவனும், மறைகளுடன் கூடிய அரிய கலைகள் வல்லவனுமான திருஞானசம்பந்தனுடைய ஒலி பொருந்திய தமிழின் மாலை என்று உரைத்த பத்துப் பாடல்களையும் உண்மையான மனத்தினால் நினைத்துத் துதி செய்ய வல்லவர்கள்மேல் வருத்தத்தினைச் சேர்க்கின்ற துயரங்கள் சென்று அடையாவாம். அவர்களது வினைகளும் அழிந்து விண்ணவர்களது ஆற்றலினும் அதிகமான ஆற்றலைப் பெறுவார்கள்.

கலி—ஒலி. வலிகெழுமனம்-வலிமை (உறுதி) பொருந்திய மலம்.

தமிழின் ஒலி கெழுமாலை — ஒலி இங்கு இசையைக் குறித்தது. எனவே இசையோடு கூடிய தமிழின் மாலை எனப் பொருள் கொள்க.

மெலிகெழுதுயர் — மெலிவு இங்கு வருத்தம் என்ற பொருளில் வந்தது.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கழுமலம் — 3

பண் – புறநீர்மை] திருச்சிற்றம்பலம் [3-ம் திருமுறை

மடல்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்
வன்னியும் மத்தமுஞ் சடைமேல்
படலொலி திரைகள் மோதிய கங்கைத்
தலைவனூர் தம்மிடம் பகரில்
விடலொலி பரந்த வெண்டிரை முத்தம்
இப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி ஓதம் மோதவந் தலைக்கும்
கழுமல நகரென லாமே. 1

பதிகப்பொழிப்புரை: 1. இதழ்கள் மலிந்த கொன்றை மலரும், நெருங்கிய ஒளியையுடைய எருக்கம்பூவும், வன்னியிலையும், ஊமத்தம்பூவும் தரித்த சடையின்மேல் ஒலி அடங்கிய அலைகள் மோதும்படியான கங்கைக்குத் தலைவனாராகிய சிவபிரானது இருப்பிடம் (எதுவெனச்) சொன்னால், (அது) வீசுதலின் ஒலி மிகுந்த வெள்ளிய அலைகளால் முத்துக்களையும் சிப்பிகளையும் கொண்டுவந்து வெண்மையான நீர்ப்பெருக்கையுடைய கடலின் மிக்கவெள்ளமானது கரையில் மோதி அங்கு மிங்கும் அலைபாய்கின்ற திருக்கழுமலம் என்று கூறலாம்.

மடல் - பூவின் இதழ், துன்றுதல் – நெருக்கமாயிருத்தல்.

படல் - படுதல், குறைதல், அடங்குதல் போன்ற பொருளில் வந்தது. படல் ஒலி – ஒலிபடல் என மாற்றிக் கொள்க.

கங்கைத் தலைவனுர் - கங்கா நதியினைப் பெண்பாலாகக் கூறும் வழக்கு பற்றி இறைவனைக் கங்கையின் மணாளர் என்று கூறுவர்.

விடல் ஒலி - அலைகள் வீசுவதால் உண்டாகும் ஒலி.

ஒலி ஓதம் - மிக்க வெள்ளம்; ஒலி என்னும் சொல் மிகுதிப் பொருளில் வந்ததாகக் கொள்க. ''ஒலி மென் கூந்தல்'' என்பதற்குத் ''தழைத்த மெல்லிய கூந்தல்'' என்று புறநானூறு 146-வது பாடலில் உரை கூறப்பட்டுள்ளதும் காண்க. தழைத்த என்பது மிகுதிப் பொருளில் வந்ததாம்.

மின்னிய அரவும் வெறிமலர் பலவும்
விரும்பிய திங்களுந் தங்கு
சென்னிய துடையான் தேவர்தம் பெருமான்
சேயிழை யொடும்உறை விடமாம்
பொன்னியல் மணியும் முரிகரி மருப்புஞ்
சந்தமும் உந்துவன் திரைகள்
கன்னிய ராடக் கடலொலி மலியுங்
கழுமல நகரென லாமே. 2

2. ஒளி செய்கின்ற பாம்பும், மணம் மிக்க மலர்களும், அனைவரும் விரும்பும் சந்திரனும் தங்குகின்ற சென்னியை யுடையவனும், தேவர்கள் தம் பெருமானுமாகிய சிவபிரான் உமாதேவியாரோடு உறைகின்ற இடமாவது, பொன்னின் தன்மையுடைய மணிகளையும், ஒடிந்த யானைத் தந்தங்களையும், சந்தனக்கட்டைகளையும், உந்தித் தள்ளுகின்ற வலிய அலைகளையுடையதும், கன்னிப்பெண்கள் கடற்கரையில் விளையாடுதலையுடையதும் கடலொலி மிகுதலையுடையதுமான திருக் கழுமலநகர் எனக்கூறலாம்.

மின்னுதல் — ஒளிசெயல். வெறி — மணம். சென்னி - தலை. சேயிழை — செம்மையான ஆபரணமணிந்தபெண். இங்கு உமாதேவியாரைக் குறித்தது. முரி — முரிந்த, ஒடிந்த. மருப்பு — தந்தம். சந்தம் — சந்தனக்கட்டை. உந்துதல் - தள்ளுதல், செலுத்துதல்

கன்னியர் ஆட — கடலில் நீராடுவது விசேட காலங்களில் தவிர பொதுவழக்கின்மையால் ஆட என்பதற்கு விளையாட எனப் பொருள் கொண்டோம். கடலொலி மலியும்—கன்னியர் ஆடலின் ஒலி கடலொலியுடன் சேர்ந்து மிகுதலையுடைய ஒலி என்று கொள்ளலாம்.

சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபந்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனுர் தங்கிட மெங்கும்
ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி
ஒலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையான் மிக்க
கழுமல நகரென லாமே. 3

3. பெருமையுடைய தொண்டர்கள் செழுமையான மலர்கள், நீர் இவற்றோடு தூபமுங் கொண்டு திருவடிகளைப் பூசிக்கும்படி, கொன்றைமாலையினைத் தமது திருமுடிமேல் வைத்தருளிய சிவபிரானுர் எழுந்தருளியிருக்கும் இடமாவது, ஊர்கள் என எங்குமிருக்கும் திருப்பதிகள் உள்பட எல்லா உலகங்களையும், பொங்கியெழுகின்ற ஒலிக்குங் கடலானது மூடிக் கொள்ள (அதனுள் தான் ஆழாது) அக்கடல்மேல் மிதந்ததும் மேகத்திலேயுள்ளதான செம்மையாகிய நன்மையால் மிக்கதுமான திருக்கழுமலநகர் எனக் கூறலாம்.

முதலடியில் உள்ள 'கொண்டடி போற்ற' என்பதைச் 'செழுமலர் புனலொடு தூபம்' என்பதுடன் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.

சைவனுர் — சிவபிரானுர், மங்களத்துக்கு இருப்பிடமானவர் என்று பொருள் கொள்க. 'ஆர்' விகுதி உயர்வு பற்றி வந்தது. இச்சொல் மனிதர்களைக் குறிக்கும்போது சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சமயமாகிய சைவத்தை மேற்கொண்டொழுகுபவர் என்று பொருள்படும்.

காருறு செம்மை நன்மை — மேகத்தில் உள்ளதாகிய செம்மையாகிய நன்மை என்பது பருவகாலத்தே மழைபொழிதலும், மிகுமழை, குறைவு மழை முதலியன இல்லாது இருத்தலும், வரையாது பொழிதலும், கைம்மாறு வேண்டாமையும் பிறவுமாம். வரையாதும் கைம்மாறு கருதாதும் வழங்கும் வள்ளல்கள் உண்மையும் இதனால் குறிப்பாகப்பெறப்பட்டது.

நன்மையான் மிக்க — இதில் உள்ள 'ஆன்' என்பதை அசையாக்கி நன்மை மிக்க எனக் கொள்ளலுமாம்.

மண்ணின ரேத்த வானுளார் பரச
அந்தரத் தமரர்கள் போற்றப்
பண்ணினு ரெல்லாம் பலபல வேடம்
உடையவர் பயில்விட மெங்கும்
எண்ணினல் மிக்கார் இயல்பினல் நிறைந்தார்
ஏந்திழை யவரொடு மைந்தர்
கண்ணினல் இன்பங் கண்டொளி பரக்குங்
கழுமல நகரென லாமே. 4

4. மண்ணுலகத்தவர் ஏத்தவும், வானுறைவோர் துதிக்கவும், ஆகாயத்திலுள்ள தேவர்கள் போற்றவும் விளங்கி, எல்லாவற்றையும் ஆக்கியருளியவரும், பலபல சிவமூர்த்தங்களாக விளங்குபவருமான சிவபெருமான் வசிக்கும் இடமாவது (யாதெனில்), கருத்தினல் உயர்ந்தவர்களும், (உயர்திணைக்கு உரிய) தன்மைகள் எல்லாம் நிறைந்தவர்களுமாகிய மகளிரொடு ஆடவர்கள் தம் கண்களால் இன்பம் நுகர்ந்து புகழ் ஆகிய ஒளியைப் பரப்புகின்ற திருக்கழுமலநகர் எனக் கூறலாம்.

இத்திருப்பாடல் அகப்பொருள் தழுவி வந்தது. ''யானேக்குங்காலை நிலநோக்கும் நோக்காக்கால், தானேக்கி மெல்ல நகும்'' என்ற திருக்குறளும் (காமத்துப்பால், அதிகாரம் 110, குறள்-4) அதற்குரிய பரிமேலழகருரையுங் காண்க.

அமரர் என்பது இந்திரனுல் ஆளப்பெறும் தேவருலகத்த வரையும், வானுளோர் என்பது அவ்வுலகத்துக்கு மேலுள்ள சனலோகம், தபோலோகம், மகர்லோகம், ஸத்யலோகம் போன்ற உலகங்களில் உறைபவர்களையும் குறிக்குமெனக் கொள்க. இவ்வுலகங்களும் வானிலே ஒன்றன் மேலொன்ருக அமைந்துள்ளன என்று புராணங்கள் கூறுகின்றன.

எண்ணினுல் - எண் இங்கு கருத்து, எண்ணம் போன்ற பொருள்களைத் தரும். இயல்பு - தன்மை, குணம்.

ஏந்திழையவர் - ஏந்திய இழையை (ஆபரணத்தை) உடைய பெண்கள். மைந்தர் - இங்கு ஆண்கள் என்ற பொருளில் வந்தது.

கண்ணினுல் இன்பங் காண்டல் - தலைவன் தலைவியின் உளப்பாட்டுக் குறிப்பினை அவள் நோக்கினுலும், நாணினுலும், மகிழ்ச்சியாலும் அறிந்து இன்புறுதல்.

சுருதியான் தலையும் நாமகள் மூக்குஞ்
சுடரவன் கரமுமுன் னியங்கு
பரிதியான் பல்லும் இறுத்தவர்க் கருளும்
பரமனுர் பயின்றினி திருக்கை
விருதினுன் மறையும் அங்கமோ ராறும்
வேள்வியும் வேட்டவர் ஞானங்
கருதினுர் உலகிற் கருத்துடை யார்சேர்
கழுமல நகரென லாமே. 5

5. பிரம்மதேவனது தலையையும், ஸரஸ்வதியின் மூக்கையும், தீக்கடவுளின் கையையும், எல்லோர் முன்னிலையிலும் இயங்குதலையுடைய சூரியனின் பற்களையும் இறுத்து (அருளுடன் பின் உமாதேவியார் வேண்ட) அவர்களுக்கு அருளுதலையும் புரிந்த பரமசிவனுர் பயின்று இனிதாக இருக்குமிடம் (யாதெனின்) புகழுடைய நான்கு வேதங்களையும், ஆறு வேதாங்கங்களையும் அறிந்து (அறிந்த வண்ணம்) வேத வேள்விகளையும் செய்தவர்களும், ஞானம் பெற வேண்டும்

என்று கருதியவர்களும், உலக வாழ்வில் நோக்குடையவர்களுமாகியவர்கள் சேர்கின்ற திருக்கழுமலநகர் எனக்கூறலாம்.

சுருதியான் தலை, நாமகள் மூக்கு, சுடரவன் கரம், பரிதியான் பல் இவற்றை இறுத்து, அவருக்கு அருளும் புரிந்த வரலாறு கந்த புராணம் - தட்ச காண்டம் - யாகசங்காரப் படலத்தில் காண்க. விரிவஞ்சி இங்கே விடுத்தாம்.

வேட்டல் - வேள்விகளைச் செய்தல். வேள்விகள் வேட்டவர், ஞானங் கருதினர் உலகிற் கருத்துடையார் என முத்திறத்தினராக்காது, "வேள்வியும் வேட்டவர்களாகிய ஞானங் கருதினர் எய்தும் உலகடைவதில் கருத்துடையவர்கள்" எனச்சேர்த்து ஒரே வகையினராகவும் கொள்ளலாம்.

புற்றில்வாள் அரவும் ஆமையும் பூண்ட
புனிதனர் பனிமலர்க் கொன்றை
பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த
படிறனர் பயின்றினி திருக்கை
செற்றுவன் திரைகள் ஒன்றொடொன் றோடிச்
செயிர்த்துவண் சங்கொடு வங்கங்
கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங்
கழுமல நகரென லாமே. 6

6. புற்றிலே வாழுந்தன்மையுடைய ஒளியுடைய பாம்பையும், ஆமையோட்டையும் பூணாகக் கொண்ட புனிதரும், குளிர்ச்சி பொருந்திய கொன்றை மலருடன் வான்மதியையும் பற்றித் தம் சடையினிடை வைத்த படிறனருமாகிய சிவபெருமானர் பயின்று இனிதாக இருக்குமிடம் (யாதெனில்) வலிய அலைகள் ஒன்றோடொன்று செற்று ஓடிச்செயிர்த்து வளமையான சங்குகளோடு கப்பல்களையும் கொண்டுவந்து, கல்மலைகளைப் போலக் கரைக்கு வந்து முழங்குதலையுடைய திருக்கழுமலநகர் எனக் கூறலாம்.

புற்று - இறைவரணியும் பாம்பு புற்றில் வாழ்வதன்றாயினும் இனம் பற்றி புற்றில் வாளரவு எனக்கூறினர்.

அரவும் ஆமையும் பூண்ட வரலாறுகளையும் தட்ச காண்டம் ததீசிஉத்தாப் படலத்தில் கண்டு கொள்க. சந்திரனைத் தரித்தமையையும் தட்ச காண்டமே கூறும்.

படிறனார் — 'ஆர்'விகுதி உயர்வுபற்றியதாகையால் வஞ்சகர் என்றது இகழ்ச்சியைக் குறிக்காதது கண்டு கொள்க. 'வஞ்சதே, பரிவஞ்சதே' எனத் திருவுருத்திரமும் கூறும். இது பற்றி முன் உரைத்ததும் கொள்க.

அலைபுனற் கங்கை தங்கிய சடையார்
அடல்நெடு மதிலொரு மூன்றுங்
கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட
குழகனார் கோயில தென்பர்
மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு
மற்றுமற் றிடையிடை யெங்குங்
கலைகளித் தேறிக் கானலில்வாழுங்
கழுமல நகரென லாமே. 7

7. அலைகளுடன் கூடிய நீராகிய கங்கை தங்கிய சடையினை உடையவரும், நீண்ட ஒரு மூன்று மதில்களும் கொலை நிகழ்வதாகிய போரினிடையே செந்தீயினால் வெந்து அழியும் படிச்செய்த குழகனுருமாகிய சிவபிரானது கோயில் என்று கூறுவர். (எதனையெனின்) மலைகளையும் விட மிக்குயர்ந்த சரக்கு மரக்கலங்கள் கடற்கரையில் நிற்க, இடையிடையே எங்கும் மான் கூட்டங்கள் களிப்புடன் ஏறி வாழ்தலையுடைய திருக்கழுமலநகர் எனக்கூறலாம்.

குழகனார் — அழகன், இளமையுடையவன்; இறைவன் எப்பொழுதும் பதினாறுவயதுடைய யுவனாகவே இருப்பான் என்று புராணங்கூறுகிறது. ஷோடசாப்தாக்ருதி: சம்பு: (பதினாறு வயதுடையவரான சம்பு) என்று ஹாலாஸ்ய மாஹாத்மியமும், யுவானம் புருஷச்ரேஷ்டம் (நித்தியயௌவன முடையவரும், புருஷச்ரேஷ்டரும்) என்று ஸ்காந்த புராணம் ஸம்புவகாண்டமும் கூறுதல் காண்க.

ஒருக்கமுன் நினையாத் தக்கன்றன் வேள்வி
உடைதர உழறிய படையார்
அரக்கனை வரையால் ஆற்றலன் றழித்த
அழகனுர் அமர்ந்துறை கோயில்
பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப்
பலபல அறங்களே பயிற்றிக்
கரக்குமா றறியா வண்மையால் வாழுங்
கழுமல நகரென லாமே. 8

8. இறைவனை நினையாது முற்காலத்தில் தட்சன் என்பான் செய்த யாகமானது ஒருங்கே அழியும்படிக் கலக்கிய பூதப்படைகளையுடையவரும், அரக்கனுகிய இராவணனது ஆற்றலை மலையைச்சற்றே கால்விரலால் ஊன்றி நெருக்குதலால் அழித்த அழகனுருமாகிய சிவபிரான் விருப்புடன் பொருந்தி உறையும் கோயில் (எதுவெனில்) பரவுதலையுடைய மெய்ம்மையான புகழையுடையவர்கள் குற்றங்கள் வாரா வண்ணம் நன்கு ஆராய்ந்து பலபலவான அறங்களையே மிகச் செய்து, கொடாமை என்பதை அறியாத வள்ளன்மையோடு வாழுகின்ற திருக்கழுமலம் என்று கூறலாம்.

ஒருக்க — எல்லாவற்றையும் ஒருங்கே

உடைதர — அழிந்து போம்படி, உழறிய — கலக்கிய

படையார் — வீரபத்திரக்கடவுளின் தலைமையில் பூதப் படைகளே வேள்வியை அழித்ததாகப் புராணங் கூறுகிறது. அழகர் — சுந்தரர், சிவபெருமான்.

வுண்புகழ் — வண்மை இங்கு மெய்ம்மையைக் குறித்ததாகக் கொள்க. கரத்தல் — இரப்பவர்க்குக் கொடாது மறைத்தல்

வண்மையால்—இதிலுள்ள ஆல் என்னும் உருபுக்கு 'ஓடு' என்ற உடநிகழ்வுப் பொருள் கொள்ளப்பட்டது 'தூங்குகையா னேங்கு நடைய' என்ற புறநானுறு 22-ம் பாடலில் கொள்ளப்

பட்டது போல. இவ்வாறின்றி வண்மையால் தாழ்வு இன்றி வாழ்தலையுடையவர் என்று கொள்ளினுமமையும்.

அருவரை பொறுத்த ஆற்றலி னானும்
அணிகிளர் தாமரை யானும்
இருவரும் ஏத்த எரியுரு வான
இறைவனார் உறைவிடம் வினவில்
ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ணம்
ஒலிபுனல் வெள்ளமுன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்
கழுமல நகரென லாமே. 9

9. கோவர்த்தன மலையைத் தாங்கிய ஆற்றலுடைய திருமாலும், அழகு விளங்குகின்ற தாமரைமலரில் உறைபவனான பிரம்மதேவனும் ஆகிய இருவரும் ஏத்தித்துதிக்கும்படியாகத் தீப்பிழம்பின் உருவெடுத்த இறைவனாரது உறைவிடம் எதுவெனக் கேட்கின் (அதுதான்) ஒருவரும் இவ்வுலகில் வாழ இயலாத வண்ணம் நீரின் மிகுதியான கடல் வெள்ளம் முற்காலத்தில் பரவ, அவ்வாறு சூழ்ந்த கடலிடைக் கரியமலை போல் மிதந்த திருக்கழுமலம் எனக்கூறலாம்.

கோவர்த்தனமலை தாங்கியது பற்றி முன்வந்த இடங்களில் கூறியது இங்கும் கொள்க.

இத்திருப்பாடலும் பிரளய காலத்தில் திருக்கழுமலம் ஆழாது மிதந்த புராணச் செய்தியை வலியுறுத்துகிறது.

உரிந்துயர் உருவில் உடைதவிர்ந் தாரும்
அத்துகில் போர்த்துழல் வாரும்
தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச்
செம்மையார் நன்மையால் உறைவாம்

குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை
மல்லிகை சண்பகம் வேங்கை
கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங்
கழுமல நகரென லாமே. 10

10. உயர்ந்த தமது உடலினின்றும் உடையினை உரிந்து நீக்கினராகிய சமணர்களும், ஆடையினை (உடல் முழுவதும் பெண்கள்போல மூடி) போர்த்துத் திரிபவர்களாகிய பௌத்தர்களும் சொல்லிய புன்மொழிகளை (அவை அத்தகையன) எனத் தெரிந்து அவற்றைக் கேளாத செந்நெறியாளர் நன்மையோடு உறையுமிடமாவது, குருந்து, உயர்ந்தகோங்கு, கொடிகளில் பூக்கும் முல்லை, மல்லிகை, சண்பகம் மற்றும் வேங்கை ஆகிய மலர்களைக் கரிய அகன்ற கண்களையுடைய மங்கையர்கள் கொய்யுகின்ற திருக்கழுமலநகர் எனக் கூறலாம்.

உயர்உரு - சமணர்கள் பெருத்த உடலும் உயர்ந்த உருவமுமுடையவர்கள் போலும்.

நன்மையால் - இங்கும் 'ஆல்' என்பது 'ஓடு' என்ற பொருளிலேயே கொள்ளப்பட்டது.

உறைவு - உறைவிடம், கொய்தல் - பூப்பறித்தல்.

கானலங் கழனி ஓதம்வந் துலவுங்
கழுமல நகருறை வார்மேல்
ஞானசம் பந்தன் நற்றமிழ் மாலை
நன்மையால் உரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி
உள்ளமும் ஒருவழிக் கொண்டு
வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்
மற்றிதற் காணையும் நமதே. 11

திருச்சிற்றம்பலம்

11. கடற்கரைச் சோலைகளையடுத்த வயல்களில் கடல்நீர் வந்து பாய்தலையுடைய திருக்கழுமலம் என்னும் நகரில் எழுந்தருளியிருக்கும் இறைவனார் மீது பாடப்பட்ட திருஞான சம்பந்தனது நல்ல தமிழ் மாலைகளை நல்லமுறையில் பாடித் துதிப்பவர்கள், உடலுடன் தொடர்பு கொண்டதான பிறவிப் பிணி நீங்கி உள்ளமும் ஒருமைப்பாட்டினையடைய சிவலோகத்தில் வாழ்வார். மீண்டும் நிலவுலகத்தில் வந்து பிறக்க மாட்டார்கள். இதற்கு ஆணையும் நம்முடையதே ஆகும்.

நன்மையால் உரை செய்தலாவது பக்தி உணர்வுடனும் எழுத்துப்பிழையின்றியும், இசையுடனும் பாடுதலாம்.

திருஞானசம்பந்தர் ஆணையிட்டுப்பாடிய அருமைத் திருப்பதிகங்களுள் இதுவும் ஒன்றாகும். இங்ஙனம் ஆணையிட்டுப் பாடும் திறத்தினை ''ஆணை நமதென்ன வலான்'' என நம்பியாண்டார் நம்பிகள் போற்றிப்பாடியுள்ளார். (11-ம் திருமுறை, ஆளுடையபிள்ளையார் திருத்தொகை, வரி - 45)

சிவம்

---

## பதிப்பாசிரியர் குறிப்பு

இந்த மாலையில் பிரசுரிக்கப்படுவதாக இருந்த திருக்கழுமலம், மேகராகக்குறிஞ்சியிலமைந்த திருப்பதிகம், சில எதிர்பாராத இடையூறுகளால் இதில் பிரசுரிக்கப்படவில்லை. அடுத்த தமிழ்மாலையில் பிரசுரிக்கப்படும்.

— ஆங்கீரஸன்

---

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

— திருஞானசம்பந்தர் அருளியது

---

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்






**யத்யத் கர்ம கரோமி**
**தத்ததகிலம்**
**சம்போ தவாராதனம்**

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளான தேவாரத் திருப்பதிகங்களை பொழிப்புரை, விசேடவுரை, பதிக வரலாறு, தலவரலாறு, புராணவரலாறு முதலிய உரை விசேடங்களுடன் 108 தமிழ் மாலைகளாகப் பிரசுரித்துச் சிவ பெருமானின் 108 திருநாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தமிழ்மாலையாகச் சமர்ப்பிக்கும் இந்த திட்டத்தில் இதுவரை 16 தமிழ் மாலைகள் வெளிவந்துள்ளன.

விலை விவரம் :

| | | |
|---|---|---|
| முதல் ஆறு மாலைகள் ஒவ்வொன்றும் | ... | 2-00 |
| ஆறு தமிழ் மாலைகளும் சேர்த்து | ... | 10-00 |
| 7-வது தமிழ் மாலை முதல் | | |
| ஒவ்வொரு தமிழ் மாலையும் | ... | 3-00 |
| ஒவ்வொரு ஆறு தமிழ் மாலைகளும் | ... | 15-00 |
| 1 முதல் 108 தமிழ் மாலைகளுக்கும் | | |
| முன்பண உதவிச் சலுகை விலை | ... | 158-00 |

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு மற்றவை பிரசுரமான தும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்—பதிப்பாசிரியர்
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033.

Elango Achukoodam, 166, R. H. Road, Madras-4. Phone : 7 4 1 2 1